| தேதி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ச்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | வெள். | ஸப். | 19-45 | ஆயி. | 45-10 | ம. | — |
| 2 | 16 | சனி. | அஷ். | 19-2 | மக. | 45-27 | அ. சி. | நவ. |
| 3 | 17 | ஞா. | நவ. | 16-33 | பூர. | 44-00 | சி. அ. | தச. |
| 4 | 18 | திங். | தச. | 12-18 | உத். | 40-48 | சி. | ஏகா. |
| 5 | 19 | செவ். | ஏகா. | 6-25 | ஹஸ். | 36-5 | சி. | த்வா |
| | | | த்வா. | 59-2 | | | | |
| 6 | மே மீ 20 | புத. | த்ர. | 50-32 | சித். | 30-2 | சி. | த்ர. |
| 7 | 21 | வியா. | சசி. | 41-15 | சுவா. | 23-5 | அ. சி. | சசி. |
| 8 | 22 | வெ. ○ | பௌ. | 31-38 | விசா. | 15-35 | சி. | பௌ |
| 9 | 23 | சனி | ப்ர. | 22-3 | அனு. | 8-00 | சி. | ப்., த். |
| 10 | 24 | ஞா. | த்வி. | 12-58 | கேட். | 0-50 | ம. சி | த்ரி. |
| | | | | | மூலம் | 54-33 | | |
| 11 | 25 | திங். | த்ரி. | 4-55 | பூரா. | 49-35 | ம. | சது. |
| | | | சது. | 58-12 | | | | |
| 12 | 1959௵ 26 | செவ் | பஞ். | 53-15 | உத்தி. | 46-20 | சி. | பஞ். |
| 13 | 27 | புதன் | ஷஷ். | 50-20 | திர. | 45-0 | சி. | ஷஷ் |
| 14 | 28 | வியா. | ஸப். | 49-30 | அவி. | 45-47 | சி. ம. | சப். |
| 15 | 29 | வெள். | அஷ். | 50-47 | சத. | 48-40 | சி. | அஷ் |
| 16 | 30 | சனி | நவ. | 53-58 | பூரட். | 53-23 | ம. சி. | நவ. |
| 17 | 31 | ஞா. | தச. | 58-33 | உத்தி. | 59-33 | அ. | தச. |
| 18 | 1 | திங். | ஏகா. | 60-00 | ரேவ. | 60-00 | சி. | ஏகா. |
| 19 | 2 | செவ். | ,, | 4-23 | ,, | 6-45 | அ. சி. | த்வா. |
| 20 | 3 | புதன் | த்வா. | 10-43 | அசு. | 14-28 | ம. சி. | த்ர. |
| 21 | 4 | வியா | த்ர. | 17-8 | பர. | 22-15 | சி. ம. | சசி. |
| 22 | 5 | வெள். | சசி. | 23-20 | க்ருத். | 29-50 | சி. ம. | — |
| 23 | ஜூன் மீ 6 | சனி ● | அமா. | 29-2 | ரோ. | 36-55 | அ. சி. | அமா |
| 24 | 7 | ஞா. | ப்ர. | 34-10 | மிருக. | 43-20 | சி. | ப்ர. |
| 25 | 8 | திங். | த்வி. | 38-20 | திரு | 49-00 | சி. அ. | த்வி. |
| 26 | 9 | செவ். | த்ரி. | 41-42 | புன. | 53-47 | சி. | த்ரி. |
| 27 | 10 | புதன் | சது. | 44-03 | பூச. | 57-30 | சி. | சது. |
| 28 | 11 | வியா. | பஞ். | 45-18 | ஆயி. | 60-00 | சி. | பஞ். |
| 29 | 12 | வெள். | ஷஷ். | 45-20 | ,, | 00-13 | ம. | ஷஷ் |
| 30 | 13 | சனி | ஸப் | 43-58 | மக. | 1-38 | அ. சி. | சப். |
| 31 | 14 | ஞா. | அஷ். | 41-7 | பூர. | 1-40 | சி. அ. | அஷ் |

4, 18உ ஏகாதசி. 6, 20உ ப்ரதோஷம். 21உ கிருத்திகை விரதம். 23உ அமாவாஸை.

**உங்கள் நக்ஷத்ர தேவதைகள் யார் ?**

# வைதிக தர்ம வர்த்தனீ.



விகாரிஹூ வைகாசிமீ

மலர் 12] [இதழ் 8.

தனிப்ரதி அணா 7.

வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம்: கடவாசல்,

வடகால் P.O. (Via.) சீர்காழி.

(தஞ்சை ஜில்லா.)


## பொருளடக்கம்.



## தார்மிகச் செய்திகள்.

பற்பல இடங்களில் ஸ்ரீ ராம நவமி உத்ஸவம் கொண்டாடப்பட்டது. சீர்காழி கைவிளாஞ்சேரியில் ஸ்ரீ T. T. பிள்ளை தர்மத்தின் ஆதரவில் நமது ஆசிரியரால் ஸ்ரீமத் ராமாயண கதைகள் நடந்தன.

மஹா ஜனங்களின் பிரார்த்தனைக் கிணங்க ஆசிரியரின் புதல்வர் ஸ்ரீ S. ஜயராமன், M. A., திரௌபதி மாந ஸம்ரக்ஷணம் என்பதை இரண்டுமணி நேரம் உபன்யஸித்தார். பலரிதை பாராட்டினர்.

### பசுபந்தம்.

குன்னத்தில் ஸ்ரீ கோதண்டராம தீக்ஷிதரின் சிறிய குமாரன் ஸ்ரீ பால ராமன் தன் வீட்டிலேயே சென்ற அமாவாஸையன்று வார்ஷிக பசுபந்தம் நடத்தினர்.

### ஆயிரக்கால் மண்டபத் திருப்பணி.

சிதம்பரத்தில் ஷை கைங்கர்யம் இது வரை ஒன்றேமுக்கால் லக்ஷம் செலவில் நடந்தது. இன்னும் 1 லக்ஷம் செல வாகும். வைகாசி ஆனியில் கும்பாபிஷேகம் நடக்கும்.

### மூன்றுபாஷை ராமாயணம்.

சிதம்பரம் வக்கீல் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி அய்யர் தனது வீட்டில் வால்மீகி கம்ப துளஸி ராமாயண ப்ரவசநங்களை நடத்துகிறர். ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள் வால்மீகியும்—தியாகராஜரும் என்பதுபற்றியும் நமது ஆசிரியர் ஸ்ரீவத்ஸ சர்மா, உயர்ந்த ராம பக்தர் யார்? என்பதுபற்றியும் உபன்யாஸித்தார்கள்.

### விவாஹம்.

சென்னையில் நான்காவது நாள் விவாஹம் நிறைய நடந்தது. குரு பக்தர் ஸ்ரீ நடராஜய்யர், கண்ட்ராக்டர், பிராம்மண தக்ஷிணை நிறைய அளித்துப் பூஜித்தார்.

### உதார ஸன்மானம்.

தர்க்கம் முதலி சாஸ்த்ரங்களில் பாண்டித்யமுள்ள உத்தமூர் ஸ்ரீ வீர ராகவ ஸ்வாமிகள் எனும் ஸ்ரீ வைஷ்ணவபண்டிதருக்கு ரூ. 500 ஸ்ரீ ஜகத் குரு காஞ்சி காமகோடி ஆசார்யாள் ஸன்மாநம் செய்தார்கள். ஸமீபத்தில் அத்வைத கண்டந நூல் எழுதியவர் இவர்.

### உடனே நன்கு செய்க.

வாநசாஸ்த்ரம், ஜோதிஷம்முதலிய வைகளை ஸம்ஸ்கிருதத்தில் உள்ளபடி ஆராய்ச்சி செய்ய உத்ர பிரதேச ராஜ்யத்தில் ஒரு கலாசாலை ஆரம்பித்தனர். இப்பொழுதாவது கண் திறந்தது சந்தோஷமே. லீலாவதி என்ற வடமொழி நூலால் முன்னர் ராமாநுஜமும் இப்போது சகுந்தளா என்பவளும் மேனாட்டை வியக்கச் செய்தனர்.

## கிருத்திகை முதல் அச்விநிவரை நக்ஷத்திர தேவதைகள்.

# ஸாமவேத ஔபாஸனம்.

ஔபாஸன மந்த்ரஸ்ய அகஸ்த்யோப4க3வாந்ரிஷி: । அனுஷ்டுப்ச2ந்த:3 ஹுதாஶநோ தேவதா ஹும் பீ3ஜம் ப2ட்ஶக்தி: ஸ்வாஹாகீலகம் ஸர்வஹோமார்த்த2 ஸித்4யர்தே2 ஜபே விநியோக:

**கரந்யாஸம்.**

ஸ்வஸ்திபூர்ணமுகா2ய — அங்கு2ஷ்டா2ப்யாம் நம:
தேஜோராஶயே — தர்ஜனீப்யாம் நம:
தூ4ம்ராக்ஷாய — மத்4யமாப்4யாம் நம:
த4நுர்த4ராய — அநாமிகாப்4யாம் நம:
ஸஹஸ்ரார்சிஷே — கநிஷ்டி2காப்4யாம் நம:
ஸர்வக்ரத்வாத்மனே —கரதலகரப்ருஷ்டாப்4யாம்நம:

**அங்கந்யாஸம்.**

ஸ்வஸ்திபூர்ணமுகா2ய — ஹ்ருத3யாய நம:
தேஜோராஶயே — ஶிரஸே ஸ்வாஹா
தூ4ம்ராக்ஷாய — ஶிகாயை வஷட்
த4நுர்த4ராய — கவசாய ஹும்
ஸஹஸ்ரார்சிஷே — நேத்ரத்ரயாய வௌஷட்
ஸர்வக்ரத்வாத்மனே — அஸ்த்ராயபட்
பூர்பு4வஸ்ஸுவரோமிதி தி3க்ப4ந்த:

**த்யானம்.**

हेमाश्वत्थ सुरद्रुमोदर भवन्निर्यान्तमश्वाकृतिम्
वर्षन्तं धनधान्य रत्ननिचयं रन्ध्रैस्स्वकै स्सन्ततम् ।
ज्वाला पल्लवितस्वरोम विवरं भक्तार्ति सम्भेदनं
वन्दे धर्मसुखार्थ मोक्ष फलदं दिव्याकृतिं पावकम् ॥

ஹேமாஶ்வத்த2 ஸுரத்ரு3 மோதரப4வந் நிர்யாந்தமஶ்வாக்ருதிம் । வர்ஷந்தம் த4ந தா4ந்ய ரத்ன நிசயம் ரந்த்4ரை: ஸ்வகைஸ் ஸந்ததம் । ஜ்வாலாபல்லவித ஸ்வரோம விவரம் ப4க்தார்தி ஸம்பே4த3நம் । வந்தே3 த4ர்ம ஸுகா3ர்த்2த மோக்ஷ ப2லத2ம் தி3வ்யாக்ருதிம் பாவகம் ॥

**கிருத்திகை — அக்னிதேவதை**

அக்3னேர்த்4யானம் ப்ரவக்ஷ்யாமி ஸர்வ ஹோமார்த3 ஸித்3்4யே | த்ரி3முக2ஞ்சைகஹ்ருத3யம் சதுஶ் ஶ்ரோத்ரம் த்3விநாஸிகம் | ஆஸ்யத்3வயஞ்ச ஷண்ணேத்ரம் ஸப்த ஹஸ்த ஸமன்விதம் | மேஷாரூட4ம் சதுஶ் ஶ்ருங்க3ம் த்ரிபாத3ஞ்ச ஜடான்விதம் | ஶக்தி மந்ந்ததா4நஞ்ச ஸ்ருக்ஸ்ருவௌத3க்ஷிணே கரே | தோமரம் வ்யஜனம் வாமே க4்ருதபாத்ரந்து வாமகே | ஸ்வாஹாந்து த3க்ஷிணே பார்ஶ்வே ஸ்வதா4தே3வீஞ்ச வாமகே | ஆத்மாபி4முகமாஸீனம் ஏவம் ரூபம் ஹுதாஶனம் |

ஶுக்லாம்........ஶாந்தயே. ப்ராணாயம்ய | மமோபாத்த.......ப்ரீத்யர்த்த2ம் ஸமஸ்தபாபக்ஷயார்த்த2ம் ஸர்வாபீ4ஷ்டஸித்4யர்த்த2ம் ப்ராதரௌபாஸனம் ஹோஷ்யாமி. (மாலையில் ஸாயமௌபாஸனம் ஹோஷ்யாமி) கையை அலம்பி ஒருஸமித்தால் உல்லேகனம் செய்து அதன்மீது அக்னியை வைத்து " தே3வஸவித: ப்ரஸுவ" என்று பரிஷேசனம் செய்து

**ॐ चत्वारि शृङ्गा त्रयो अस्य पादा द्वेशीर्षे सप्तहस्तासो अस्य त्रिधाबद्धो वृषभो रोरवीति महो देवो मर्त्यां आविवेश । एषहि देवः प्रदिशोऽनुसर्वाः पूर्वोहिजातः स उ गर्भेऽन्तः सविजायमान स्सजनिष्यमाणः प्रत्यङ्मुखास्तिष्ठति विश्वतोमुखः ॥**

ஓம் சத்வாரி ஶ்ருங்காத்ரயோ அஸ்ய பாதா3த்வே ஶீர்ஷே ஸப்தஹஸ்தாஸோ அஸ்ய த்ரிதா4ப3த்தோ4 வ்ருஷபோ4 ரோரவீதிமஹோதே3வோ மர்த்யாகு3ம் ஆவிவேஶ | ஏஷஹிதே3வ: ப்ரதி3ஶோநுஸர்வா: பூர்வோஹிஜாத: ஸஉக3ர்பே அந்த: | ஸவிஜாய மாநஸ்ஸஜநிஷ்யமாண: ப்ரத்யங்முகா2ஸ்திஷ்ட2தி விஸ்வதோமுக2: ப்ராங்முகோ2தே3வ அக்னே3மம அபி4முகோப4வ | (அக்னியை அலங்கரித்து எட்டு திசையிலும் அக்ஷதையை வைக்கவேண்டும்.)

இந்த்ராய நம:, அக்னயே நம:, யமாய நம:, நிருருதயே நம:, வருணாய நம:, வாயவே நம:, ஈஶாநாய நம:

---

**ரோகிணி — பிரஜாபதி**

அக்னயே நம:, (அக்னியில்) ஆத்மனே நம:, (தன் மீது) ஸர்வேப்[4]யோ ப்ராஹ்மணேப்[4]யோ நம;. (ப்ராம்மணர் மீது) அக்ஷதையைப் போட்டு, ஹோஷ்யாமி (ஹோமம் செய்யப் போகிறேன்.) பிராம்மணர்கள் (ஜுஹுதி[4]) ஹோமம்செய் என்று சொல்லவேண்டும்.

அக்ஷதையைக் கையில் எடுத்துக்கொண்டு இரண்டாகப் பிரித்து ஓம் ஸூர்யாய ஸ்வாஹா, ஸூர்யாயேதம் நமம. ப்ரஜாபதயே ஸ்வாஹா என்று இரண்டாவதை வட புறமாக ஹோமம் செய்யவேண்டியது. மாலையில் அக்னயே ஸ்வாஹா என்றுகூறி அக்னய இதம் நமம ப்ரஜாபதயே ஸ்வாஹா ப்ரஜாபதயே இதம் நமம. தே[3]வஸவித: ப்ராஸாவீ; (என்று கூறி பரிஷேசனம்) காலையில் ஆஶ்வஸூக்தம். வாமதேவ்யம் மாலையில். கௌஸூக்தமும் வாமதேவ்யமும் கானம் செய்யவேண்டியது.

கௌஷூக்தஸ்யஸாம்ந: கௌஷூக்தரிஷி; காயத்ரீசந்த: இந்த்ரோ தேவதா.

**கௌஷூக்தம்.**

**1 ओं यदिन्द्रा हं यथौ। हौ हो वा हा इ। तुवां। ईशीयवव्व औ हुवाइ। का ईत्। स्तो तां मेगोसखौ। हु वा इ। ह वा ये। सा या त्। हो वाऽहौ हां वा। अग्नि राहु ताऽचः। सु वर्महाः।**

ஓம் யதி[3]ந்த்ரா[3]ஹம் யதௌ[2]। ஹௌஹோவா ஹா இ। துவாம்। ஈஶீயவவ்வஔஹுவாஇ। காஈத்। ஸ்தோதாம் மேகோ[3]ஸகௌ[3]। ஹுவாஇ। ஹவாயே। ஸாயாத்। ஹோவாஹௌஹாம்வா। அக்[3]னிராஹுதாச: ஸு வர்மஹா:।

**ஆஶ்வஸூக்தம்.**

**2. आ औ हो वा हा इ। यदिन्द्राहम्। यथा। त्वं। ऐ ही यै ही॥ आ कु इ शी य वस्व आ इक इत्। ऐ हीं यै ही। आ इ। स्तो ता मा इगो। सखा सा या। औहोवा।शुक्र आं हुताः। सु वर्मयाः।**

ஆ ஔ ஹோ வா ஹா இ। யதி[3]ந்த்[3]ராஹம்। யதா। த்வம்। ஐஹீயைஹீ। ஆகு இஶீயவஸ்வ ஆ இக இத்। ஐஹீம்யைஹீ। ஆஇ। ஸ்தோதாமாஇகோ[3]। ஸகா

ஸாயா । ஔஹோவா । ஶு²க்ர ஆம்ஹு²தா: । ஸு²வர் மயா: ॥ என்று காலே.

3. வாமதேவ்ய ஸாம: (ஸமிதாதானத்தில் வந்த வாமதேவ்யத்தையும், கீழ்க்கண்ட வாமதேவ்யத்தையும் ஜபிக்கவும்.)

**कायां । नश्चा इत्रा इ आभुवात् । ऊ । तीसदावृधस्सखा औ हो हाइ । कया शचाई । ष्टयौ हो । हीम्मा । वार्तो हाइ । कास्त्वां । सत्यो मा दानाम् । माहिष्ठो मात्सादन्धसा औ हो हा इ । आऽभी । षुणा स्सा खीनाम् । आविता जरा इतृगाम् । औ हो हा इ । शता धवा सि यौ हो । हीम्मा । ता यो हा इ ॥**

காயாம் । நஶ்சா இத்ராஇ ஆபு[4]வாத் । ஊ । தீஸதா வ்ருத[4]ஸ்ஸகா । ஔ ஹோ ஹா இ । கயாஶசா ஈ । ஷ்ட யெளஹோ । ஹிம்மா । வார்த்தோ । ஹாஇ । காஸ்த்வா ஸத்யோமாதா[3]ணும் । மாஹிஷ்டோ[2]மாத்ஸாத[3]ந்த[4] । ஸா ஔ, ஹோ ஹா இ । த்[3]ருடா[4]சிதா[3] । ருஜெளஹோ । ஹீ ம்மா । வாஸோ ஹா இ । ஆபி । ஷு²ணுஸ்ஸாகீ[2]நாம் । ஆவிதாஜராஇத்ருணும் । ஔ ஹோ ஹா இ । ஶதாப[4]வா ஸியெளஹோ । ஹீம்மா । தாயோஹாஇ ॥

**कया नश्चित्र आभूव दूती सदावृधस्सखा कया शचिष्ठया वृता । कस्त्वा सत्यो मदानां मंहिष्ठोमत्स दन्धसः । दृढा चिदा रु जे व सु । आभीषूणस्सखीनां अविदाजरि तृणाम् । शतं भवा स्यूतये ॥**

**भद्रङ्कर्णेभिः श्रृणुयामदेवाः । भद्रंपश्येमा क्षभिर्यजत्राः ।**
**स्थिरैरङ्गै स्तुष्टुवाꣳसस्तनूभिर्व्यशेम देवहितं यदायुः ॥**

**स्वस्तिन इन्द्रो वृद्धश्रवाः । स्वस्तिनः पूषा विश्वदेवाः स्वस्तिन स्ताक्ष्र्यो अरिष्ट नेमिस्वस्तिनो बृहस्पपि र्दधातु ॥**

---

**ஆருத்ரா — ருத்ரன்**

त्रयास्त्रिंशद क्षरासुभवति त्रयास्त्रिंशद्देवता देवतास्वेवप्रतितिष्ठायोत्तिष्ठन्ति प्राजापत्यं वै वामदेव्यं प्रजापतावेव प्रतिष्ठायोत्तिष्ठन्ति पशवोवै वामदेव्यं पशुष्वेव प्रतिष्ठायोत्तिष्ठन्ति शान्तिर्वै वामदेव्यं शान्तावेव प्रतिष्ठायोत्तिष्ठन्ति शान्तिः शान्तिः शान्तिः स्वाहा ॥ உபஸ்தானம் கரிஷ்யே.

4 கயாநஶ்சித்ர ஆபூ4வதூ3தீ ஸதா3வ்ருத4ஸ்ஸகா2 கயாஶசிஷ்ட2யாவ்ருதா । கஸ்த்வாஸத்யோமதா3னும் மம் ஹிஷ்டோ2மத்ஸ்த3ந்த4ஸ: । த்ரு3டா4சி தா3ருஜேவஸு । ஆபீ4ஷுணஸ்ஸகீ2நாம் அவிதாஜரித்ரூணும் । ஶதம்ப4 வாஸ்யூதயே ॥

ப4த்ரங் கர்ணேபி: ஶ்ருணுயாம தேவா: । ப4த்3ரம் பஶ்யேமாக்ஷபிர் யஜத்ரா: । ஸ்தி2ரைரங்கை3ஸ்துஷ்டுவாகும் ஸஸ்தனூபி4ர் வ்யஶேம தேவஹிதம் யதா3யு: ஸ்வஸ்தின இந்த்ரோ வ்ருத்தஶ்ரவா: ஸ்விஸ்திந: பூஷா விஶ்வவேதா:3 । ஸ்வஸ்தினஸ்தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி: । ஸ்வஸ்திநோப்ரு3ஹஸ் பதிர்த3தா4து ॥

த்ரயஸ்த்ரிஶத2க்ஷராஸு ப4வதி த்ரயஸ்த்ரிம்ஶத்தே3வதா தே3வதாஸ்வேவ ப்ரதிதிஷ்டா2யோத்திஷ்ட2ந்தி ப்ராஜாபத்யம்வை வாமதே3வ்யம் ப்ரஜாபதாவேவ ப்ரதிதிஷ்டா2யோத்திஷ்ட2ந்தி பஶவோவை வாமதே3வ்யம் பஶுஷ்வேவ ப்ரதிதிஷ்டா2யோத்திஷ்ட2ந்தி ஶாந்திர்வை வாமதே3வ்யம் ஶாந்தாவேவ ப்ரதிதிஷ்டா2 யோத்திஷ்ட2ந்தி ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ஸ்வாஹா ॥ உபஸ்தாநம்கரிஷ்யே

नमस्तौ। हो ग्ना इ। ओजसाऽई। गृणाऽन्ताऽइदे। वा क्रु ष्ट याऽः। अ मा येऽः। आ ऽ मा ऽ औ हों वा। त्रु म र्दे याऽ॥ अग्नये नमः॥

நமஸ்தௌ । ஹோக்னஇ । ஓஜஸாஈ । க்3ருணன் தாஇதே । வாக்ருஷ்டயா: । அமாயே: । ஆமாஔஹோ வா । த்ருமர்த3யா ॥ அக்னயே நம:

---

புனர்வஸு — அதிதி

மந்த்ரஹீனம் க்ரியாஹீனம் ப[4]க்திஹீனம் ஹுதாஶந। யத்[4] துதந்து மயாதே[3]வ பரிபூர்ணந்தத[3]ஸ்துதே | ப்ராஶ் சித்தான்யஶேஷாணிதப: கர்மாத்மகானி வை। பாநி தேஷா மஶேஷாணும் க்ருஷ்ணுநுஸ்மரணம் பரம்— இதி ஜபேத் நமஸ்கார:

**நமஸ்கார மந்த்ரம்.**

நமஸ்தே கார்ஹ பத்யாய நமஸ்தே த[3]க்ஷிணுக்[3]னயே |
நம ஆஹவனீயாய மஹாவேத்[3]யை நமோநம: ||
காண்டத்வ[3]யோப பாத்யாய கர்மப்[3]ரஹ்ம ஸ்வரூபிணே ।
ஸ்வர்கா[3]பவர்க[3] ரூபாய யஞ்ஞேஶாய நமோ நம: ||
அபிவாதயே.........அஸ்மீபோ:[4]

**ரக்ஷையை இட்டுக்கொள்ளும் மந்த்ரம்.**

**6 यद्वा ऊऽ विश्वतिश्शिताः। सुप्रीतो मनुषो विशे। विश्वा इदाऽग्निः। प्रतिरक्षा। सिसेधता। औऽहोवा। हो इ। डा॥**

யத்வா ஊ விஶ்வபதிஶஶிதா:| ஸுப்ரீதோ மனு ஷோவிஶே | விஶ்வாஇதாக்னி: | ப்ரதிரக்ஷா | ஸிஸேத, தா | ஔஹோவா | ஹோஇ | டா[3] ||
(என்று ரக்ஷையைத் தரித்துக்கொண்டு

காயேனவாசா மனஸா இந்த்[3]ரியைர்வா
புத்[4]யாத்மனு வா ப்ரக்ருதே ஸ்வபாவாத் ।
கரோமியத்[3]யத்ஸகலம் பரஸ்மை
நாராயணுயேதி ஸமர்ப்பயாமி ||

அநேந ப்ராதரௌபாஸனேன பகவான் ஸர்வாத்மக: ஸர்வம் யக்ஞேவர: ப்ரீணுது || ந்யூநாதிரிக்தம் ஸர்வம் ஸுகுணமஸ்து.

ஓம் தத்ஸத் ப்ர[3]ம்ஹார்ப்பணமஸ்து.

---

**பூசம் — பிருஹஸ்பதி**

# தைத்திரீய உபநிஷத்.

ப்ருகுவல்லி—ஒன்பதாவது அநுவாகம்.

अन्नं बहु कुर्वीत। तद्व्रतं। पृथिवी वा अन्नम्। आकाशो ऽन्नादः। पृथिव्या माकाशः प्रतिष्ठितः। आकाशे पृथिवी प्रतिष्ठिता। तदेत दन्न मन्ने प्रतिष्ठितम्।

**अन्नं** அன்னத்தை **बहु** அதிகமாக **कुर्वीत** செய்ய வேண்டும். **तत्** அது **व्रतं** கடமை. **पृथिवी वा** பூமியானது **अन्नं** அன்னம் **आकाशः** ஆகாஶம் **अन्नादः** அன்னத்தை உண்பதாகும். **पृथिव्यां** பூமியில் **आकाशः** ஆகாஶமானது **प्रतिष्ठितः** நிலையுள்ளதாகும். **आकाशे** ஆகஶத்தில் **पृथिवी** பூமியானது **प्रतिष्ठिता** ப்ரதிஷ்டை உள்ளதாம். **तत्** அத்தகைய **एतत् अन्नं** இந்த அன்னமானது **अन्ने** அன்னத்தில் **प्रतिष्ठितं** ப்ரதிஷ்டை உள்ளது.

மேலும் கீழும் ஆகாஶமிருப்பதால் இடையிலுள்ள ப்ருதிவீ அன்னமென்னும் ஆகாஶம் அன்னாதமென்றும் கருதப்படுகிறது. பூமியின்மேல் ஆகாஶம் இருப்பதாகவும் அடியிலும் ஆகாஶமிருப்பதாகவும் ஆதார அதேயம் எனக் கற்பிக்கப்படுகிறது. ஆதலால் ஒன்றுக்கொன்று அன்னமாம். இப்படி உபாஸகன் எண்ணவேண்டும்.

स य एतदन्न मन्ने प्रतिष्ठित वेद प्रतितिष्ठति। अन्नवानन्नादो भवति। महान्भवति प्रजया पशुभिर्ब्रह्म वर्चसेन। महान्कीर्त्या।

முன் கூறியதுபோலவே பதமும் அர்த்தமும் தாத்பர்யமுமாகும்.

ஒன்பதாமநுவாகம் முற்றிற்று.

---

### பத்தாமநுவாகம்.

**न कंचन वसतौ प्रत्याचक्षीत। तद्व्रतम्। तस्मात् यया कयाच, विधया बह्वन्नं प्राप्नुयात् अराध्यस्मा अन्नमित्या चक्षते।**

**वसतौ** வீட்டில் வந்த **कंचन** ஒருவரையும் **नप्रत्याचक्षीत** (மறுக்காதே) அப்புறப்படுத்தக் கூடாது. **तत्** அது **व्रतं** விரதமாகும். **तस्मात्** அதனால் **यया कयाच** ஏதாவதொரு **विधया** வகையால் **अन्नं** அன்னத்தை **बहु** அதிகமாக **प्राप्नुयात्** அடையவேண்டும். **अस्मै** இவர்பொருட்டு **अन्नं** அன்னமானது **अराधि** செய்யப்பட்டது. **इति** என்று **आचक्षते** சொல்கிறார்கள்.

நமது வீட்டில் தங்குகிறேன் என்று வந்தவரை, முடியாது வேறிடம் போ என்று மறுக்கக் கூடாது. அது உபாஸகனுக்கு விரதமாகும். அதிதி தங்கியிருப்பதால் ஏதேனும் ஒரு வகையால் கிருஹஸ்தன் அன்னத்தை நிறைய ஸம்பாதிக்கவேண்டும். அதிதிகளுக்காகவே அன்னம் என வித்வான்கள் கூறுகிறார்கள். ஏதேனும் ஒரு வழி என்றால் வேதம் கற்பிப்பது வேள்வி செய்துவைப்பது தானம் வாங்குவது ஆகிய ஸ்வதர்மத்தில் ஒரு வகையால் பொருள் தேடு என்றே பொருள்.

---

**சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு.**

சந்தாதாரர்கள் விலாஸ மாறுதலை உடன் எழுதவும். ஆங்கில மாதம் 6ம்தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்கும் படித் தெரிவித்தால் தாமதமில்லாமல் பத்திரிகை காலத்தில் கிடைக்க சௌகர்யமாயிருக்கும்.

---

**ஆயில்யம் — ஸர்பங்கள்**

# ஸ்ரீ சிவ மானஸ பூஜை.

[இதை மனப்பாடம் செய்து பாராயணம் செய்தால் சிவபூஜை செய்த பலனைப் பெறலாம்.]

आराधयामि मणिसन्निभ मात्मलिङ्गम्
मायापुरी हृदय पङ्कज सन्निविष्टम् ।
श्रद्धानदी विमलचित्त जलाभिषेकैः
नित्यं समाधि कुसुमैः न पुनर्भवाय ॥ 1 ॥

ஆராதயாமி மணி ஸன்னிப மாத்ம லிங்கம்
மாயாபுரீ ஹ்ருதய பங்கஜ ஸன்நிவிஷ்டம் ।
ஶ்ரத்தா நதீவிமல சித்த ஜலாபிஷேகை:
நித்யம் ஸமாதி குஸுமை: ந புனர்பவாய ॥

மாயாபுரீ எனும் உடலிலுள்ள ஹ்ருதயத்தாமரையில் அமர்ந்து இருப்பவரான சுத்த ஸ்படிகத்திற்குச் சமமான ஆத்மலிங்கத்தை ச்ரத்தை எனும் நதியிலிருந்து நிர்மலமான சித்தம் எனும் ஜலத்தினுல் அபிஷேகம் செய்து ஸமாதி எனும் புஷ்பங்களால் மறுபடியும் பிறக்காமலிருப்பதற்காக ஆராதிக்கிறேன்.

रत्नैः कल्पितमासनं हिमजलैः स्नानं च दिव्यांबरं
नानारत्न विभूषणं मृगमदामोदाङ्कितं चन्दनं ।
जाती चंपक बिल्वपत्रमतुलं पुष्पं च धूपं तथा
दीपं देव दयानिधे पशुपते हृत्कल्पितं स्वीकुरु ॥ ॥ 2 ॥

ரத்னை: கல்பிதமாஸநம் ஹிமஜலை: ஸ்னானம்சதிவ்யாம்பரம்
நானாரத்ன விபூஷணம் ம்ருகமதாமோதாங்கிதம் சந்தனம்
ஜாதிசம்பக பில்வபத்ர மதுலம் புஷ்பம் ச தூபம்ததா
தீபம் தேவ தயாநிதே பஶுபதே ஹ்ருத்கல்பிதம் ஸ்வீகுரு.

ரத்னங்களால் ஆஸனம் ஸங்கல்பிக்கப்பட்டது. பன்னீரால் அபிஷேகமும் திவ்யவஸ்த்ரமும் பலவகையான ரத்ன ஆபரணங்களும் கஸ்தூரி வாஸனை நிறைந்த சந்தனமும், ஜாதி சம்பகம் பில்வ பத்ரம் முதலிய ஒப்பற்ற பூக்களும், தூபம், தீபம் முதலியவைகளும் என் மனதினுலே ஸங்கல்பித்து அளிக்கின்றேன். ஹே கருணாநிதே! தேவா! பஶுபதே! அவைகளை ஏற்றுக்கொள்ளும்.

---

सौवर्णे मणिवर्यखण्डखचिते पात्रे अन्नमप्यद्भुतं
भक्ष्यं पञ्चविधं पयोदधि घृतं रंभाफलं पायसम् ।
शाकानामयुतं जलं च विमलं कर्पूर खण्डोज्वलं
तांबूलं मनसा मया विरचितं भक्त्या प्रभो स्वीकुरु ॥ 3 ॥

ஸௌவர்ணேமணிவர்யகண்டகசிதே பாத்ரே அன்னமப்யத்புதம் பக்ஷ்யம் பஞ்சவிதம் பயோ ததிக்ருதம் ரம்பாபலம் பாயஸம் ஶாகானாமயுதம் ஜலம் ச விமலம் கர்பூர கண்டோஜ்வலம் தாம்பூலம் மனஸா மயா பிரசிதம் பக்த்யா ப்ரபோ ஸ்வீகுரு

உயர்ந்த மணிகளிழைக்கப்பட்ட ஸுவர்ண பாத்ரத்தில் அத்புதமான அன்னம், ஐந்து வகை பக்ஷ்யம், பால், தயிர், நெய், வாழைப்பழம், பாயஸம், பதினுபிரக்கணக்கான கறிகாய்கள், நிர்மலமான தீர்த்தம், பச்சைக்கற்பூரம் கலந்த தாம்பூலம் முதலியவைகளை பக்தியோடு மனதால் ஸங்கல்பித்து அளிக்கிறேன். ப்ரபோ! அவைகளை ஏற்றுக்கொள்ளும்.

छत्रं चामरयोर्युगं व्यजनमप्यादर्शकं निर्मलं
वीणावेणु मृदङ्गका हलकला गीतं च नृत्यं तथा ।
साष्टाङ्गा प्रणतिः स्तुतिर्बहु विधेत्ये तत्समस्तं मया
सङ्कल्पेन समर्पितं तव विभो पूजां गृहाण प्रभो ॥ 4 ॥

சத்ரம் சாமரயோர்யுகம் வ்யஜநமப்யா தர்ஶகம் நிர்மலம் வீணுவேணு ம்ருதங்ககா ஹலகலா கீதம்ச ந்ருத்யம் ததா। ஸாஷ்டாங்கா ப்ரணதி: ஸ்துதிர் பஹுவிதேத்யேதத் ஸமஸ்தம் மயா ஸங்கல்பேந ஸமர்பிதம் தவ விபோபூஜாம் க்ருஹாண ப்ரபோ ॥

குடை, இரண்டு சாமரங்கள், விசிறி, நிர்மலமான கண்ணுடி, வீணை, வேணு, ம்ருதங்கம், காஹளம் முதலிய வாத்யத்தோடு கூடிய சங்கீதம், நர்த்தனம், ஸாஷ்டாங்க நமஸ்காரம், பஹுவிதமான ஸ்தோத்ரம், ஸங்கல்பத்தினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட இவையெல்லாவற்றையும் ப்ரபோ! தாங்கள் ஏற்றுக்கொள்ளும்!

आत्मा त्वं गिरिजामतिः सहचराः प्राणाः शरीरं गृहं
पूजा ते विषयोप भोगरचना निद्रा समाधि स्थितिः ।

सञ्चारः पदयोः प्रदक्षिण विधिः स्तोत्राणि सर्वागिरो
यद्यत्कर्म करोमि तत्तदखिलं शंभो तवाराधनम्    ॥ 5 ॥

ஆத்மாத்வம் கிரிஜாமதி: ஸஹசரா: ப்ராண: ஶரீரம் க்ருஹம் பூஜாதே விஷயோப போக ரசனு நித்ரா ஸமாதிஸ்திதி: | ஸஞ்சார: பதயோ: ப்ரதக்ஷிண விதி: ஸ்தோத்ராணி ஸர்வா கிரோ யத்யத் கர்ம கரோமி தத்ததகிலம் ஶம்போ தவாராதனம் ||

தாங்கள் எனது ஆத்மா. என் புத்தியே பார்வதீ. ப்ராணன் உன்னேடுகூட ஸஞ்சரிக்கும் பணியாளன். உடலே உமக்குக் கோயில். நான் அனுபவிக்கும் விஷயங்களே உமக்குச் செய்யும் பூஜை. தூங்குவதே ஸமாதிநிலே. காலால் ஸஞ்சரிப்பது உம்மை வலம்வருவதாகும். நான் பேசுவதெல்லாம் உமது துதியாகும். சம்போ! நான் எதை எதைச் செய்கின்றேனே அதெல்லாம் தங்களுக்குச் செய்யும் ஆராதனமாகும்.

---

## புஸ்தக அறிமுகம்.

**முருகன் புகழ்மாலே:** தமிழ். 56 பக்கம். ஹ்ரிஷீகேசம் ஸ்ரீ சிவாநந்தரின் சிஷ்யர் ஸ்ரீ ஷண்முகாநந்த சைதன்யரால் தொகுக்கப்பட்டது. தபால்செலவுடன் விலே 83 ந. பை. மாம்பலம் குரு குலத்தில் கிடைக்கும். ஸ்ரீ சிவாநந்தரின் அரிய மொழி, குஹஹ்ருதய ஸ்தோத்திரம் கவசம் புஜங்கம் 108 நாம, ஸ்துதிகள் அகவல் முதலியன அடங்கியது. குஹபக்தருக்கு மிக முக்யமான அரிய நூல்.

**ஆபஸ்தம்ப தர்ப்பண விளக்கம்:** 70 ந.பை. தபால் சிலவுடன். மாம்பலம்குருகுல வெளியீடு. நம்மிடம் பெறலாம். தர்பணம் எப்படி பித்ருக்களே அடைகிறது? அமாவாஸ்யை, மஹாளயம், பரேஹநி, தர்பணம் செய்யும் விதி, காருண்ய பித்ருக்கள் யார்? பிரும்ம யக்ஞம், யக்ஞோபவீத தாரணம், கோத்ர விவரம், அபிவாதயே விளக்கம், ஸ்வரத்துடன் மந்திரங்கள் நாகரத்திலும் தமிழிலும், வர்ஷ அயன மாஸ பக்ஷ திதி நக்ஷத்திர வாரங்கள் முதலியன உள்ளது. உபாத்தியாயரின்றி நாமே இதைப் பார்த்து செய்து உபாத்யாயருக்கு தக்ஷிணையை அளித்து விடலாம். ஒவ்வொரு பிராம்மணர் வீட்டிலுமிருக்க வேண்டிய நூலிது.

**ஸ்ரீ சங்கர சரிதம்:** சரிதம், 108 நாமாவுடன் பூஜா விதி, தோடகாஷ்டகம் சேர்ந்தது. 45 ந.பை. தபால் சிலவுடன். மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.

**ஸ்ரீ லலிதோபாக்யானம்:** தமிழில் ஆசிரியர் எழுதியது. 4-வது பதிப்பு. விலே ரூ. 2—50 ந.பை., தபால் செலவு ரிஜிஸ்டரானல் தனி 68 ந.ப. V. P. ஆனல் 74 ந.பை. மாம்பலம் குருகுலத்தில் கிடைக்கும். வேறொருவருக்கு அச்சிட அதிகாரமளித்தது. லலிதா தேவியின் சரிதம், ஷ ஸஹஸ்ர நாம விரிவுரை அபூர்வமானது. எவரும் வெளியிடாதது. 50 காபியே வரவழைத்தோம். உடனே வேண்டியவர் ஆர்டர் அனுப்பவும்.

---

**ஹஸ்தம் — ஸவிதா**

# வைகாசிமாத கோசாரப் பலன்.

ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,
பாரத் கிரஹ ஸஞ்சாரஆசிரியர்.

[பாரத் கிரஹ ஸஞ்சாரம்: மாதாந்திர தமிழ் ஜோதிஷப்பத்திரிகை. 48 பக்கம், வருடசந்தா ரூ. 6. 17, தேவடித்தெரு, மைலே.]

## மேஷ ராசி

*அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய*

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும் வக்ரம். ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறர்கள். சூரியன் ரிஷபத்திலிருக்கிறர். இதனல் செலவுகள் அதிகமாகும். வரவேண்டியவை தடையாகும். சிலவகை விற்பனை செய்ய நேரும். இரகசிய விரோதிகளால் வருத்தம். வியாபாரத்தில் அதிக பலிதம் இராது. உத்தியோகத்தில் புதியமாற்றங்கள் ஏதுவும் ஏற்படாது.

## ரிஷப ராசி

*கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய*

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும் வக்ரம். ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும் இருக்கிறர்கள். சூரியன் ராசியில் இருக்கிறர். இதனல் செய்தொழிலில் சில தடங்கல் உண்டாகும். தன் சொல்லே தனக்கு விரோதமாகும். வியாபார நடப்பில் சில கலவரம் சிலருக்கு ஏற்படும். வெளியூர் சேதி மூலம் வருத்த முண்டாகும். சுபச்செலவுகள் ஏற்படும். முயற்சிகள் தடைப்பட்டு கூடுவதாகும்.

## மிதுன ராசி

*மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய*

குரு ஆறிலும், சனி ஏழிலும் வக்ரம். ராகு நான்கிலும், கேது பத்திலும் இருக்கிறர்கள். சூரியன் விரயத்திலிருக்கிறர். இதனல் பிறர் சகாயத்தின் பேரில் தொழில் நடக்கும். ஆரோக்யசம்பந்தமாய் செலவும், கவலேயும் ஏற்படும். சுபமுயற்சிகள் பலிதமாகும். உத்தியோகத்தில் சிலருக்கு மாற்றங்கள் ஏற்படும். பந்துக்களால் சில கிலேசமுண்டாகும். புதிய சிநேகவிருத்தியும், குடும்ப சௌக்கியமும் ஏற்பட்டுவரும்.

## கடக ராசி

*புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய*

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும் வக்ரம். ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலும் இருக்கிறர்கள். சூரியன் லாபத்தில் இருக்கிறர். பிரயத்தனங்கள் கூடிவரும். உத்தியோகத்தில் நன்மை, அதிகாரி ஆதரவு ஏற்படும். வியாபாரத்திலும் புதியவகையிலும் முன்னேற்றம் உண்டாகும். வெளியூர் போய்வர நேரும். குடும்ப சௌக்கியமும், சில பொருள், வாங்கும்படியாயும் ஏற்படும்.

---

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும் வக்ரம். ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறுர்கள். சூரியன் ஜீவனத்திலிருக்கிறுர். இதனுல் செய்தொழிலில் சௌகர்யம் ஏற்பட்டு வரினும் எதுவும் தேக்கமாகும். பிறர் காரியங்களில் தலையிட நேரும். வரவேண்டிய பணம் தடைப்பட்டு வரும். சில பொருள் விற்கும்படியாகும். உத்தியோகத்தில் அதிகாரி ஆதரவும், வியாபாரத்தில் சமவருமானமும் ஏற்பட்டுவரும். வெளியூர் போய்வர நேரும்.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி நான்கிலும் வக்ரம். ராகு ராசியிலும், கேது ஏழிலுமிருக்கிறுர்கள். சூரியன் பாக்கியத்திலிருக்கிறுர். இதனுல் தேக சுகம் சிறிது பாதிக்கும். வரவேண்டியவை தடையாகும். பொறுப்பு அதிகமாகும். புதிய ஏற்பாடுகளும் சிந்தனைகளும் உண்டாகும். சிநேக ஆதரவு உண்டாகும். உத்தியோக நடப்பில் திருப்தியற்ற போக்கு ஏற்பட்டுவரும். சிலருக்கு சில பொருள் வாங்குவதும், சுபச்செலவுமேற்படுவதும் உண்டாகும்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டிலும், சனி மூன்றிலும் வக்ரம். ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிர்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறுர். இதனுல் வெளியூர் போய்வர நேரும். செய்தொழிலில் வருமானம் கூடும். சுபமுயற்சி பலிதமாகும். உத்தியோகத்தில் நன்மை ஏற்படும். புதிய மாற்றமிராது. பந்து சேர்க்கையும், சிலருக்குப் பொருள் சேர்க்கையும் ஏற்படும். சினேக ஆதரவு ஏற்படும். செலவுகள் அதிகமாகும்

## விருச்சிக ராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ராசியிலும், சனி தனத்திலும் வக்ரம். ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருக்கிறுர்கள். சூரியன் ஏழில் இருக்கிறுர். இதனுல் பலவித சிந்தனைகளும், புதிய ஏற்பாட்டுக்கான முயற்சிகளும் உண்டாகும். வியாபார வகை நடப்பில் திருப்தியிராது. வீண் செலவுகள் உண்டாகும். உத்தியோகத்தில் சிலருக்கு மாற்றமுண்டாகும். அதிகாரியால் வருத்தம் ஏற்படும். புண்ணிய வகையிலும், சுபவகையிலும் செலவுகள் உண்டாகும்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ராசியிலும் வக்ரம். ராகு பத்திலும், கேது நான்கிலும் இருக்கிறுர்கள். சூரியன் ஆறில் இருக்கிறுர். இதனுல் சுபகாரியங்களில் செலவுகள் உண்டாகும். சுபமுயற்சிகள் கூடிவரும். வெளியூர் சேதி மூலம் நன்மையும் உண்டாகும். வியாபாரத்தில் புதிய சில ஏற்பாடுகள் உண்டாகும். முன்னேற்றம் ஏற்படும். உத்தியோக நடப்பில் சிலருக்கு புதிய மாற்றங்களும் பிறர் ஆதரவும் ஏற்பட்டுவரும்.

---

### மகர ராசி

உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும் வக்ரம். ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலுமிருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால், அலைச்சல் காரியங்களும், பிறர் உதவியை நாடுவதும் ஏற்படும். வியாபாரம் தடைப்பட்டு கூடிவரும். சிறுகச் சிறுக நன்மை உண்டாகும். குடும்ப சுகக்குறைவு ஏற்பட்டுவரும். உத்தியோகத்தில் அதிர்ப்தியான நடப்புகளும், சிலர்க்கு வேறிடம் மாற சிந்தனைகளும் உண்டாகும். பந்துக்களால் கவலை ஏற்படும்.

### கும்பராசி

அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு ஜீவனத்திலும், சனி லாபத்திலும் வக்ரம். ராகு அஷ்டமத்திலும், கேது தனத்திலுமிருக்கிறார்கள். சூரியன் சுகத்திலுமிருக்கிறார். இதனால், பெரிய மனுஷ்யர்கள் நேசம் உண்டாகும். வெளியூர் போய்வர நேரும். புண்ணிய வகையில் செலவுகள் உண்டாகும். உத்தியோகத்தில் நன்மையும் புதிய சில ஏற்பாடுகளும், மாற்றமும் ஏற்படும். குடும்ப நடப்பில் சௌகர்யமும், வரவேண்டிய பணம் வசூலாவதும் ஏற்படும்.

### மீன ராசி

பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு பாக்கியத்திலும், சனி பத்திலும் வக்ரம். ராகு ஏழிலும், கேது ராசியிலுமிருக்கிறார்கள். சூரியன் மூன்றில் இருக்கிறார். இதனால், முயற்சிகள் கூடிவரும். செய்தொழிலிலும், குடும்ப நடப்பிலும் சில ஸஞ்சலங்கள் ஏற்பட்டு வரும். சிநேக ஆதரவு உண்டாகும். பந்துக்களால் சில கவலைகளுண்டாகும். வியாபாரம் ஸம நடப்பாய் ஏற்பட்டுவரும். சுபமுயற்சிகள் உண்டாகும். தன நடப்பில் சில சிக்கல்கள் ஏற்பட்டு நிவர்த்தியாகும்.

---

## வைசாக மாஸ விசேஷம்.

வஸந்தருது வைசாகமீ ஸகல வைதிக சுபகர்மாக்களுக்கும் ஏற்ற காலம். ஸௌரமானப்படி வைசாக ஸ்நானம் 30 நாளும், தத்யோதனம் தீர்த்த கும்பம் பாதுகை விசிறி சந்தனம் புஷ்பம் துளஸீதளம் தானம் செய்வது விசேஷம். முடியாதவர் த்வாதசி பௌர்ணமி அமாவாஸைகளிலாவது தானம் செய்யவேண்டும்.

1௳ கங்காதேவியை ஜன்னு தனது வலது காதால் விட்டார். அந்த ஸப்தமி, கங்கை பூஜை செய்தால் விசேஷம்.

7௳ **நரஸிம்ம ஜயந்தி:** ப்ரஹ்லாதனைக்காக்க தூணிலிருந்து விஷ்ணு அவதரித்த நாள். புதுக்கோட்டை ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாகவதர் பல்லாண்டுகளாக அதிவிமரிசையாய் இதைக்கொண்டாடுகிறார். அத்வைத மடமான ஸ்ரீ காமகோடிபீடத்திலும் அநாதியாக இது நடக்கின்றது.

---

விசாகம் — இந்திராக்னி

# பால பாரதம்.

விராட பர்வா—(பங்குனிமீ தொடர்ச்சி)

கே: கீசகன் தான் கோரியது கைகூடியதாக எண்ணி ஆவலுடன் வந்திருப்பான்.

ப: ஆவல் மாத்திரமா? என்றுமில்லாத அலங்காரம் செய்துக்கொண்டு கள் குடித்த குரங்குபோல் புத்தி ஸ்வாதீனமில்லாமல் ஓடிவந்து கட்டில் அருகே சென்றான்.

கே: பின்னர் என்ன நடந்தது!

ப: ப்ரியே! உனக்காக நிறைய ரத்நங்களைக்கொண்டு வந்திருக்கிறேன். நன்கு அலங்காரம் செய்துக் கொண்டிருக்கிறேன் என்றான். பீமனும் பெண் குரலில் இன்று நீ என்றைக்கும் அனுபவிக்காத இன்பத்தை அனுபவிப்பாய் எனக்கூறினான்.

கே: எப்படி யுத்தம் ஆரம்பமானது?

ப: கீசகன் மெதுவாக த்ரௌபதி என்று எண்ணி பீமன் மீது கையை வைக்கும் பொழுது பீமன் சீறி எழுந்தான். அவள் கூறிய கந்தர்வன் என்றெண்ணி அவனைக் கொல்ல முயற்சித்தான். மௌன மாகவே இருவருக்கும் போர் நிகழ்ந்தது.

கே: முடிவில் அவனை பீமன் கொன்றிருப்பானல்லவா?

ப: கொன்றதுடன் அல்லாமல் அவனது கை கால்கள் தெரியாமல் உடலை ஒரே பிண்டமாகச் செய்து விட்டான்.

கே: கந்தர்வன் கொன்றான் என்று காட்டவே அப்படிச் செய்தான் போலும்?

ப: ஆம்! இவ்வேலையை முடித்து பீமன் சென்றபின் த்ரௌபதி அருகில் இருந்த வேலைக்காரர்களை எழுப்பி கீசகனது சரீரத்தைக் காண்பித்தாள்.

கே: வேலைக்காரர்கள் என்ன செய்தார்கள்?

---

அநுஷம் — மித்ரன்

ப: அவனது சகோதரர்களான உபகீசகர் என்பவர்களை அழைத்து வந்து கீசகன் பிணத்தைக் காட்டினர்.

கே: எதிர்பாராமல் நேர்ந்த இந்த பயங்கரமான ஸமாசாரத்தைக்கேட்டு அவர்கள் நடுங்கியிருப்பார்கள்! அதற்குமேல்?

ப: அரசன் உத்தரவு பெற்று கீசகன் உடலைக் கொளுத்த முயலும்போது அருகில் நிற்கும் த்ரௌபதியைக் கண்டு இவளால்தான் தன் ஸஹோதரன் இறந்தான். அவனுடன் இவளையும் கொளுத்துவோம் என்று அவளையும் ப்ரேதத்துடன் கட்டித் தூக்கிச் சென்றார்கள்.

கே: ஐய்யைய்யோ! த்ரௌபதிக்குத் தலைவலி போய்த் திருகுவலி வந்துவிட்டதே! என் செய்வாள் பாவம்? எப்படித் தப்பித்துக்கொண்டாள்?

ப: போகும்பொழுது வழியில் ஆபத்காலத்தில் கூப்பிடுவதற்காக ஸங்கேதம் செய்துகொண்ட "ஜயேஶா" என்ற பெயரைச் சொல்லிக் கத்தினாள். அதைக்கேட்டு படுக்கையிலிருந்து எழுந்து வந்து பீமஸேனன் அனைவரையும் கொன்று அவளையும் விடுவித்தான்.

கே: ஆச்சர்யம்! ஒரே இரவில் எத்தனையோ பேரை யமலோகத்திற்கு அனுப்பினான்! த்ரௌபதி சுகமாக வீடுபோய் சேர்ந்தாளா?

ப: அதற்கு என்ன சந்தேகம்? ஆனால் அவளுக்கு மறுநாள் அரண்மனையிலும் தங்க இடமில்லாமல் போய்விட்டது.

கே: என்ன காரணம்?

ப: அவளுடைய கணவன் எனக் கருதப்படும் கந்தர்வர் இரவில் இடும்பன் பீமன் பகாஸுரன் முதலியவர்களுக்குச் சமமான கீசகனையும் அவன் சகோதரர்களையும் கொன்றதால் நகரத்தில் உள்ளோர் அரசனிடம் அவளை ஊரைவிட்டுப் போகும்படி ஆணையிடும்படி வேண்டினர்.

---

# யம கீதை.

## ஆக்நேய புராணம் (பங்குனிமீ தொடர்ச்சி)

ஜகத் குருவான விஷ்ணுவைவிட நமக்கு வேறு உறவினரில்லை. தேஹம், இந்த்ரியம், மநம் முதலியவைகளில் அவர் அடியிலும் நடுவிலும் முடிவிலும் மேலும் இருக்கிறார். இந்த மாதிரி நினைத்துக் கொண்டே பிராணனை விட்டால் அவன் விஷ்ணுவாகவே ஆவான். பிரும்மம் என்பது அவரே. அவரிடமிருந்தே எல்லாம் உண்டாயின. அவரிடத்திலேயே எல்லாம் இருக்கின்றன. அவரை என்னால் பிடிக்கமுடியாது. இப்படிப்பட்டவரை குறிப்பிடமுடியாது. ஸாளக்ராமம் அல்லது அர்ச்சையில் உபாஸிக்கத் தக்கவர் மிகச்சிறந்தவர். பரன் அபரன் என்ற ஸ்வரூபத்துடன் எல்லோருடைய உள்ளத்திலும் அத்தகைய விஷ்ணுயிருக்கிறார். யக்ஞேசன் யக்ஞ புருஷன் என்று சிலர். பரமாத்மா என்று சிலர். விஷ்ணு என்று சிலர். சிவன் என்று சிலர். பிரும்மா என்று சிலர். ஈஸ்வரன் எனசிலர். இந்த்ரன் என சிலர். இப்படி பலர் ஸூர்யன், ஸோமன் காலன் என பல பெயர்களால் அழைக்கிறார்கள். ஆனால் பிரும்மா முதல் ஸ்தம்பம் என்ற சிறிய ஜந்து வரையுள்ள ஜகத் வடிவனாக இருக்கிறார் விஷ்ணு. அந்த விஷ்ணுவே பரம் பிரும்ம. அவரை அடைந்தவர் மறுபடி பிறப்பதில்லை. ஸுவர்ணம் முதலிய மஹா தாநங்களாலும் கங்காதி புண்ய தீர்த்த ஸ்நாநத்தாலும் த்யாநம் வ்ரதம் பூஜை தர்மம் வேதம் இவைகளாலும் பகவானை அடையலாம்.

நம் உடலிலுள்ள ஆத்மாவே தேரிலுள்ள யஜமாநன். உடலே தேர். புத்தியே ஸாரதி. மநதே கடிவாளம். இந்த்ரியங்களே குதிரைகள். விஷயங்களே அவை செல்லும் இடம். இந்த்ரிய மநங்களுடன்கூடிய ஆத்மாவை போக்தா என்கிறார்கள் விவேகிகள். எவனது மநம் ஏகாக்ரப் படவில்லையோ? எவனுக்கு முற்கூறிய க்ஞான மில்லையோ அவன் சிறந்த முக்தியைப் பெறுவதில்லை. ஜநந மரண துன்பங்களையே அனுபவிப்பான்.

எவன் மநம் ஏகாக்ரப் பட்டதோ? எவன் விக்ஞான முள்ளவனோ அவனே மறுபிறவி இல்லாததான அந்த சிறந்த முக்தியைப் பெறுகிறான்.

---

மூலம் — பிரஜாபதி

யார் விக்ஞானத்தை ஸாரதியாகவும் மனதைக் கடிவாள மாகவும் கொண்டிருக்கிறானோ அவன் மாளாத ஸம்ஸார வழியைக் கடக்கிறான். சிறந்த மோக்ஷத்தையும் அடைகிறான். இந்த்ரியங்களைவிடச் சிறந்தது விஷயம். விஷயத்தைவிடச் சிறந்தது மனம். மனதைவிட உயர்ந்தது புத்தி. புத்தியைவிட உயர்ந்தது மஹத். மஹத்தை விடச்சிறந்தது அவ்யக்தம். அவ்யக்தத்தைவிட உயர்ந்தது; புருஷன். புருஷனைவிட வேறு சிறந்தது கிடையாது. அதுதான் சிறந்த எல்லை. சிறந்த கதி.

அந்த புருஷன் நாம் காணும் ஸகல பிராணிகளிடமும் மறைந்து ரஹஸ்யமாக இருக்கிறார். ஸூக்ஷ்மமான புத்தி உள்ளவர்களது கூறிய புத்தியினால் காணப்படுகிறார்.

வாக்கை மனஸில் அடக்கவேண்டும். புத்தி உள்ளவன் மனதைப் புத்தியினிடம் நிறுத்த வேண்டும். புத்தியை ஆத்மாவினிடம் நிறுத்த வேண்டும். ஜீவாத்மாவை பரம சாந்தனான பரமாத்மாவினிடம் நிறுத்த வேண்டும்.

ஆத்மாவும் ஜீவனும் ஒன்றே என்று அறிந்து யம நியமாதிகளால் மனதை ஜீவனுடன் ஆத்மாவிடம் சேர்த்து பரமாத்ம ரூபமாக வேண்டும்.

பிறருக்கு ஹிம்ஸை செய்யாமை ஸத்யம் மனதால் கூட பிறர் பொருளை எண்ணாமை பிர்மசர்யம். எதையும் வாங்காமை யமம். நியமம் இந்த்ரியங்களை அடக்குதல். ஸந்தோஷம் வேதமோதல். ஈஸ்வர பூஜை. பத்மாஸநம் முதலியன ப்ராணாயாமம். ப்ரத்யாஹாரம் மனதை அடக்குதல் நல்ல விஷயத்தையே நினைப்பது ஆகியவைகளை அப்யாஸம் செய்.

அசையாமல் மனதை நிறுத்துவதே தாரணமாம். இடை விடாமல் ஏகாக்ரமனதுடன் பகவானை நினைப்பது தியானமாம். நானே பிரும்மமென்று ஒரேநிலையில் நிற்பது ஸமாதியாகும். பானை உடைந்தவுடன் ஆங்குள்ள ஆகாஶம் மகா காஶத்துடன் சேருவதுபோல் உடல் அக்ஞானம் இவை அகன்றபின் ஜீவன் ஆத்மாவுடன் ஒன்றுகிறான். முக்தனான ஜீவன் சுத்த பிரும்மமாகி விடுகிறான்.

---

பூராடம் — ஆப:

அக்ஞானத்தால் தான் பிரும்மமான தன்னை ஜீவன் என எண்ணுகிறான். அக்ஞானம் அதன் கார்யத்துடன் அகன்றபின் கிழத்தனமும் மரணமுமில்லாத அஜராமாண னை ஆத்மாவாகிறான்.

**அக்நி புராண யம கீதை முற்றிற்று.**

---

## ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு உபதேசம்.

### காரணம் கேட்காதே. — ஸதாசாரத்தை விடாதே.

வயதான பசுக்களைக் கொல்லாதே. முன் பால் தயிர் எரு விபூதிக்கு சாணம் அளித்து கிழமான பிறகு கொல்வது பாப மில்லையானால், பெற்று வளர்த்து படிப்பித்து பொருள் தேடித்தந்து கிழமான தாய் தந்தையைக் கொல்வதும் பாபமில்லைதான்.

புண்ய பாபம் பற்றி காரணம் கேட்காதே. சாஸ்த்ரப்படி நட. ஸதாசாரத்தைக் கைக்கொள். போலீஸ் நாய் வாஸனை மூலமாகத் திருடனை, கொலையாளியைப் பிடித்துத் தருகிறது. வாஸனை பூசிக் கொண்டு வேலைசெய்தால் கடியாரத்தின் ஸ்பிருங் வேலை செய்வ தில்லை. இதற்கென்ன காரணம் கூறமுடியுமா? ஆசாரமில்லாத வருடன் பேசினால் பாபம் என்கிறது சாஸ்த்ரம். ஏர் கண்டிஷன் ரூமிலும் சிலவை கூடாதென்கிறார்கள். நாமதை மீறினால் சிக்ஷை.

மிலிடரியைச் சார்ந்தவர் ஸிவிலியருடன் சேர்ந்து சாப்பிடக் கூடாதென்ற சட்டத்தை இன்றைக்கும் அநுஷ்டிக்கின்றனர். துஷ்டர் அநாசாரம் உள்ளவர்களின் ரத்தத்திலுள்ள துஷ்ட க்ருமி கள் துஷ்டருடன் பேசினாலும் அவருடன் ஸமமாக உட்கார்ந்து புஜித்தாலும் நம்மைத் தொடரும் என வைத்ய சாஸ்த்ரம் கூறு கிறது. மநிதன் செய்த சட்டங்களைப் பின்பற்றுகிறோம். தெய்விக சட்டமான தர்ம சாஸ்த்ரங்களை ஸந்தேஹிக்கிறோம். ஆக்ஷேபிக் கிறோம். இது நியாயமா.

ஆசாரத்தை உபதேசிப்பவர் முதலில் தான் அதை அனுஷ் டிக்க வேண்டும். தனக்கு உரியதைச் செய்வது ஸதாசாரம் மற்றது அநாசாரம். மனிதனுக்கு புத்தியும் வித்யையும் மிக அவச்ய மானவை. பேரானந்தத்திற்கு இவை வழிகாட்டும். 7—3—59 ஈரோடு. (ஸதாசாரம் என்ற நூல் மாம்பலம் குருகுலத்தில் கிடைக் கும். தபால் சிலவுடன் 70 ந. பை.)

---

**உத்திராடம் — விஶ்வேதேவர்கள்**

## ஜகத்குரு ஸ்ரீ காமகோடி ஆசார்யார்
## அமிருத வாக்கு.

18 மாதம் சென்னையில் தங்கி மற்றவர் 18 ஆண்டுகளில் செய்யக்கூடிய அரிய செயல்களைச் செய்து விஜய யாத்ரைக்குக் கிளம்பும்போது சுமார் லக்ஷம் பக்தர்கள் கலந்துகொண்டனர். 15—3—59 இரவு 8-மணிக்கு மைலை ஸம்ஸ்கிருத காலேஜ் திரந்த வெளியில் ஒரு சிறிய அலங்காரப் பந்தல் அமைக்கப்பட்டு அத்புதமான தீபாலங்காரம் செய்திருந்தது. ஆத்ம ஜ்யோதிஸ்ஸுடன் இரு குருமூர்த்திகளும் அதில் அமர்ந்தனர்.

ஸம்ஸ்கிருதம் தமிழ் கன்னடம் தெலுங்கு மலையாளம் ஹிந்தி ஆகிய பாஷைகளில் உபசாரப்பத்ரம் படிக்கப்பட்டது. பட்டு சால்வை ரோஜாமாலைகள் வந்து விழுந்தவண்ணமிருந்தது. வைஸ்ராயாயும் பிரதமராயுமிருந்த ராஜாஜி முதலிய பலர்பேசினர். ஆசார்யர் உபதேசித்ததில் சிறிதாவது நாம் அநுஷ்டித்தால் அவருக்கு நன்றி செலுத்துவதாகும் என்றனர்.

உபன்யாஸ மூலம் ஒருவரை திருத்தமுடியாது. உபன்யாஸகர் சொற்படி, தான் முதலில் நடக்கவேண்டும். நான் சொல்வதை எல்லாம் எல்லோரும் அப்படியே செய்யமுடியாது. முடிந்தவரை செய்வது நலம். நான் சொல்வதால் நீங்கள் திருந்தவில்லை என்றால் எனக்கு தபஸ் பூர்ணமாக இல்லை என அர்த்தம். நான் என்னை உயர்த்திக்கொள்ள பகவானை முதலில் பிரார்த்திக்க வேண்டும். உபன்யாஸம் செய்ய சென்னைக்கு வரவில்லை. லோகக்ஷேமத்திற்கு எதைச் செய்யலாம் என்ற ஸந்தேஹத்தை நீக்கவே வந்தேன். பலருடன் பேசினேன். பலர் பலவகையில் தர்மத்திலீடுபட்டனர்.

கால் நடையாக 19உ ஸ்ரீ ஜகத்குரு நடந்து நுங்கம்பாக்கம் போகும்பொழுது பல்லாயிரம் பக்தர் பின் தொடர்ந்தனர். ஹிந்து ஆசிரியர் வீட்டில் நடந்த உபசாரத்தைப் பெற்று 4-மணி அங்கு தங்கினார். ஒருவாரம் அம்பத்தூரிலிருந்து நூம்பலில் வாஸந்த நவராத்ரி செய்து வரநகரில் விஜயம் செய்திருக்கிறார்கள். சங்கர ஜயந்தியும் அங்கு நடக்கலாம்.

---

## நேயர்களுக்கு முக்ய குறிப்பு.

பண்டைய நூல், சுலோகம் முதலியவைகளையே பிரசுரிப்பதாக பத்திரிகை கொள்கை. ஆதலால் சிலர் அனுப்பும் கட்டுரை, கதை முதலியவைகளைப் பிரசுரிக்க முடியாமைக்கு வருந்துகிறோம். மன்னிக்கவும்.

---

அபிஜித் — இந்திரன்

# சாந்தி விலாஸம்.

(கணபதி தீக்ஷிதர்.)

29. आस्तिक्यं चेद्धनमखिलमप्यर्थि सात्कर्तुमर्हं

नास्तिक्यं चेत्तदपि सुतराम्भोग हेतोरपास्यम् ।

अस्पृष्ट्वापि स्वयमतिरहः स्थाप्यते यत्तदन्तः

तस्मिन् हेतुःक इतिनिभृतं तर्कयामो न विद्मः ॥

ஆஸ்திக்யம் சேத்3த4நமகி2ல மப்யர்தி2 ஸாத்கர்து மர்ஹம் நாஸ்திக்யம் சேத்தத3பி ஸுதராம்பே4ாக3 ஹேதோரபாஸ்யம் । அஸ்ப்ருஷ்ட்வாபி ஸ்வயமதிரஹ: ஸ்த2ாப்யதே யத்தத3ந்த: தஸ்மின்ஹேது:க இதிநிப்4ருதம் தர்கயாமோ ந வித்3ம: ॥

ஆஸ்திக்யம் இருக்குமானால் ஸகல பொருள்களையும் யாசகர்களுக்கு அளிப்பதே தகுதி. நாஸ்திகனாயிருந்தாலும்கூட பணத்தை, போகத்தை அனுபவிப்பதற்காக வாரி இறைக்கவேண்டும். பொருளைத் தொடாமல் மிக ரகஸ்யமாக உள்ளே பதுக்கி வைப்பதின் கருத்து என்ன? என்று ஆழ்ந்து யோசித்தாலும் காரணம் தெரியவில்லை.

தர்மசிந்தையிருந்தால் தானம்செய். அது இல்லாவிடில் நன்கு அனுபவி. இவ்விரண்டு மில்லாமல் பூமியில் புதைத்து வைத்தால் பயன் என்ன?

30. श्वानः पुच्छां चलकुटिलतां सूकराः कुक्षिपोषं

कीशादन्त प्रकटनविधिं गर्दभारूक्ष घोषम् ।

मर्त्यावक्षः श्वयथुमपि च स्त्रीषु दृष्ट्वारमन्ते

तत्सौन्दर्यं किमितिफलितं तत्तदज्ञानतोऽन्यत् ॥

ஶ்வான: புச்சாம்சல குடிலதாம் ஸூகரா: குக்ஷி போஷம் கீஶாத$^{3}$ந்த ப்ரகடநவிதி$^{4}$ம் க$^{3}$ர்த$^{3}$ப$^{4}$ாரூக்ஷ கோ$^{4}$ஷம் । மர்த்யாவக்ஷ: ஶ்வயது$^{2}$மபிச ஸ்த்ரீஷு த்$^{3}$ருஷ்ட்வா ரமந்தே தத்ஸௌந்த$^{3}$ர்யம் கிமிதிபலிதம் தத்தத$^{4}$க்ஞான தோऽந்யத் ॥

நாய், பெண்நாயின் வளைவான வாலைக்கண்டும், பன்றி, பெண் பன்றி பெருத்த வயிற்றைக் கண்டும், குரங்குகள், பெண் குரங்கு பல் இளிப்பதைக் கண்டும், கழுதை, பெண்கழுதையின் ஊளையிடு தலைக்கண்டும், புருஷர், பெண்களின் மார் வீக்கத்தைக் கண்டும் ஆநந்தமடைகிறார்கள். இவைகள் ஓர் அழகா? அக்ஞானத்தைத் தவிர வேறென்ன இருக்கிறது அவைகளில்?

காம வெறிகொண்ட அக்ஞாநி நாய் முதலிவைகளுக்கு ஸம மாவர்.

31. रन्तुं प्राप्तो दशति दशनैराननञ्चेत्प्रियाया

भोक्तुं प्राप्तो न किमिति दशेद ग्रहस्तं प्रदातुः ।

इत्थंव्यक्ते हृदयजनुषः पामरोन्मादकत्वे

हातुं सद्यः प्रभवति न कोप्यन्ततो लज्जितुं वा ॥

ரந்தும் ப்ராப்தோ த்$^{3}$ஶதி த்$^{3}$ஶநைராநனஞ்சேத் ப்ரியாயா பே$^{4}$ாக்தும் ப்ராப்தோ ந கிமிதி த்$^{3}$ஶேத$^{3}$க்$^{3}$ரஹஸ்தம் ப்ரத$^{3}$ாது: । இத்த$^{2}$ம் வ்யக்தே ஹ்ருத$^{3}$ய ஜனுஷ: பாமரோன் மாதகத்வே ஹாதும் ஸத்$^{3}$ய: ப்ரப$^{4}$வதி நகோப்யந்ததோ லஜ்ஜிதும் வா ॥

ஶ்ருங்கார ஸுகத்தை அநுபவிக்கப் பிரியமான மனைவியின் முகத்தை—கன்னம் அதரம் — கடிக்கிறான். அதைவிடப் பிரிய மான உணவை அளிக்கும்போது கை விரல்களை ஏன் கடிக்க வில்லை? முகத்தைக் கடிக்கும் மோஹம் மன்மத சேஷ்டை என அறிந்தும் அதை விடவோ அதைச் செய்கிறோமே என வெட்கப் படவோ ஒருவரும் முன்வரவில்லையே!

---

**அவிட்டம் — வஸுக்கள்**

# ஹாலாஸ்ய மஹிமை.

## சமணர்பாம்பைக் கொன்று அமிருதமளித்தல்.

குலோத்துங்க பாண்டியனது குமாரன் அநந்தகுண பாண்டியன் அரசாக்ஷி செய்தான். அச்சமயம் சிவபக்தி சிறந்து ஓங்கி எங்கும் விபூதி ருத்ராக்ஷ பஞ்சாக்ஷரீ ஶிவ பூஜை அடியார் ஆராதனை நடந்தன. இதனைக் கண்டு சமணர் சினம் கொண்டனர். ஒருஆபிசார வேள்வி செய்தனர். அதிலிருந்து ஸர்பவடிவனான அரக்கன் தோன்றினான். பாண்டியனையும் பாண்டிய நாட்டையும் பக்ஷித்துவா என்றனர். மிக பயங்கரமான விஷ ஜ்வாலையைக் கக்கிக்கொண்டு வரும் பாம்பைக் கண்டு நடுங்கி பாண்டியன் ஆலயஞ்சென்றான். ஸோமசுந்தரரை வணங்கி அருள் பெற்று வந்தான். அவரது திருவடியை மநதில் இருத்தி ஒரே அம்பினால் அப்பாம்பைக் கொன்றான். அவ்வுடலிலிருந்துகிளம்பிய விஷஜ்வாலைநகரைஎரித்தது.பலர்பாதையிலே வீழ்ந்தனர். பச்சை மரங்களும் பற்றி எரிந்து பாழாயின. பாண்டியன் கோவிலுக்குச் சென்று பகவானை வேண்டினான். ஸோமசுந்தரர் தன் தலையிலுள்ள சந்த்ரகலையில் ஒரு கிரணத்தைப் பிழிய அதிலிருந்து கிளம்பிய அமிருதம் மதுரையில் விழுந்து இறந்தவர்களை எல்லாம் எழுப்பிற்று. நகரம் முன்போல் ஶோபையுடன் விளங்கிற்று. **நக்ந ஸர்ப்ப ஹநநாய நம:**

## சமணர்பசுவை, நந்தியால் சிக்ஷித்தது.

சமணர்கள் முன்னர் தாங்களனுப்பிய, யானையையும் பாம்பையும், பாண்டியன் கொன்றதால் பாண்டியனைக் கொல்ல வேறு உபாயம் செய்தனர். பாண்டியன் சைவனானதால் பசுவைக் கொல்ல மாட்டானெனக் கருதி ஆபிசார வேள்வி செய்து மிகபயங்கரமான பசுவைபடைத்து அனுப்பினர். பசு உருவமெடுத்தாலும், அது மிக பயங்கரமான ராக்ஷஸனைப்போல் மனிதர்களையும் வீடுகளையும் மலைகளையும் கோபுரங்களையும் இடித்துத்தள்ளிக்கொண்டு மதுராபுரியை யழிக்க ஆரம்பித்தது. இதைக்கண்டு நடுங்கிய பாண்டியனும் குடிகளும் நகர தெய்வமான ஸோமசுந்தரக் கடவுளின் ஆலயம்சென்று முறையிட்டனர்.

---

பகவான் எதிரிலுள்ள நந்தியை யழைத்து பசுவை சிக்ஷி என்ருர். நந்தி பசுவைவிட கோரமான ரூபமெடுத்து பசு இடித்துத்தள்ளிய கட்டிடங்களை நிருத்தி மலைகளைக் கொம்பால் தூக்கி எறிந்து பலலீலைகளைப் புரிந்து அப் பசுவின் அருகே வந்தது. பசு காளையின் வீர்யத்தையும் அழகையும் கண்டு அதனிடம் காமனைக்கொண்டு சக்தியை யிழந்து அவனியில் வீழ்ந்து இறந்தது. அனைவரும் அதைக்கண்டு ஆஸ்சர்யமடைந்தனர். பசு வீழ்ந்த இடம் ஒரு மலையானது. நந்தி நின்ற இடமும் வ்ருஷபமலையானது. முன்னர் அடிபட்டு இறந்த யானை உடல் ''யானை மலை'' யாகவும் ஸர்ப்பத்தினுடல் நாகமலையாகவும் ஆனது. ராவணனோடு போர் புரிய வாநரஸேனையுடன் வந்த இராமனுக்கு அகஸ்த்ய முனிவர் இம்மலைகள் உண்டான ஸமாசாரத்தையும் ஸோமசுந்தரனின் பெருமையையும் கூறி அவரை வணங்கி அவரருளால் வெற்றி பெறுவாய் என ஆசீர்வதித்தார். **நக்ந தேனு நிபாதனுய நம:**

## மெய்காட்டிய சரிதம்.

அநந்த குணபாண்டியன் மகன் குல பூஷண பாண்டியன் அரசாக்ஷி செய்து வந்தான். அவனது ஸேனுதிபதியான ஸௌந்தரஸாமந்தன் என்பவன் சிவனடியார்களையே சிவனுக எண்ணித் துதிப்பான்.

ஒருநாள் வேடர் தலைவனுன சேதிராயன் என்பவன் மதுரை மீது படையெடுக்க யோசித்து வந்தான். இதை அறிந்த பாண்டியன் பொக்கிஷத்திலிருந்து வேண்டிய பொருளை எடுத்துக் கொண்டு வேண்டிய ஸேனைகளைத் தயார் செய் என்ருன். மந்திரி ஸாமந்தன் அப்பொருளைக் கொண்டு ஆலயத்திற்கு அழகிய மண்டபங்களையும் ஆண்டவனுக்கு அத்புதமான ஆபரணங்களையும் ஆயிரக் கணக்கான அடியார்களுக்கு அன்னதானமும் செய்து வந்தான். அதனுல் பாண்டியனது செல்வம் மேன்மேலும் வளர்ந்தது. ஆனுல் பொருமை கொண்டசிலர் ஸாமந்தன் ஸேனைகளைச் சேர்க்காமல் வீண் செலவு செய்கிருன் என பாண்டியனிடம் கூறினர். அரசன் மந்த்ரியை விசாரிக்க அவர் ஆந்திர கலிங்க விராட மராட முதலிய பல

தேசங்களுக்கு பணமும் ஓலையும் அனுப்பியிருப்பதாகக் கூறினன். அரசன் ஐயங்கொண்டு ஆனல் ஸேனைகள் எப்பொழுது வரும்? என்று கேழ்க்க நாளை காலையிலேயே வந்து விடும் என்றுரைத்தான். அன்றிரவு ஆலயஞ் சென்று ஐயனே! உமக்கும் அடியார்க்கும் பணிசெய்தேன். வேந்தனே சினங்கொண்டு ஸேனை எங்கே என்கிறன். என் செய்வேன்! என்னைக் காப்பது உமது கடன்! என்று மனமுருகக் கதறினன். ஸாமந்த! அஞ்சேல்! நீ செலவு செய்த பொருளுக்கு எற்ற அளவு ஸேனை நாளை காலையிலேயே அரசன் முன் வருமென அசரீரி கூறிற்று.

வேந்தனும் அமைச்சனும் ஊரில் உள்ள அனைவரும் எப்படி எங்கிருந்து ஸேனைவரும் என ஆவலுடன் நோக்கியிருந்தனர். ஸோமசுந்தரக் கடவுள் வேதத்தைக் குதிரையாக்கி தான் ஸேனதிபதியாக அதில் அமர்ந்து வந்தார். குண்டோதரன் கும்பன் நிகும்பன் முதலிய சிவ கணங்களும் கையில் கத்தி ஏந்தி போர் வீரர்களைப் போல் அரசன் அரண்மனையை அணுகினர். ஸாமந்தன் அவர்களை அறிமுகம் செய்து வைக்கையில் வரிசை வரிசையாகச் சென்று அவர் அங்க நாட்டவர், இவர் வங்க நாட்டவர் இங்ஙனம் கூறிச் சென்றர். குதிரை மீதுள்ள வீரத் தலைவன் அழகைக்கண்டு அவனை யருகில் வரும்படி யழைத்து அவரைத் தர்சித்து மெய்மறந்த பாண்டியன் அவருக்கு எண்ணிறந்த ஆடை ஆபரணங்களைப் பரிசாக அளித்தார். ஸாமந்தனுக்காக அதைப் பெற்ற ஸோமசுந்தரர் வந்த வீரர்களுடன் திடீரென மறைந்தார். இதனிடையிலே தூதர் ஓடி வந்து தங்கள் நாட்டை படையெடுக்கக் கருதிய வேடராஜன் புலியினல் அடித்துக் கொல்லப் பட்டான் என்ற செய்தியைக் கூறினன். அரசன் ஆய்சர்யமடைந்தான். ஸாமந்தனுக்காக பகவானே இங்ஙனம் வந்தார் என உணர்ந்து அவனுக்கு அபரிமிதமான ஸன்மானம் தந்து கொண்டாடினன். ஸத்ய தர்மாய நம:

### அக்ஷய்ய நிதி அளித்தல்.

குணபூஷண பாண்டியன் சிவ பக்தியில் ஈடுபட்டுத் தவருமல் சிவவிருதங்களைச் செய்துவந்தான். சிவபலம்

---

உத்திரட்டாதி — அஹிர்புத்னியர்

இருக்கிறதென பிராம்மணர்களை அலக்ஷியம் செய்துவந்தான். அடியாருக்கு இழைக்கும் தீங்கு ஆண்டவனுக்கு இழைத்ததைவிடப் பன்மடங்கு பாபம். நாட்டில் மழை குன்றிற்று. வருவாய் குறைந்தது. குடிகள் கூக்குறல் அதிகமாயிற்று. பலர் வேறுநாடு சென்றனர். பாண்டியன் மனம் நொந்து பகவானிடம் முறையிட்டான். அவர் கனவில் அரசன் குற்றத்தை எடுத்துக் காட்டி அழியாத நிதியைக் கொடுத்தார். அரசன் அகமகிழ்து அதனைக்கொண்டு அந்தணரை ஆராதித்தான். நடராஜ ஸன்னதிக்கு தங்க ஓடு அளித்தான். மழை பொழிந்து நாடு நலம் பெற்றது. **நீவீதாநாய நம:**

## வளையல் விற்றது.

கருமமே சிறந்ததெனக் கருதி பக்தியை மறந்த தாருகாவந முனிவர் பொருட்டு பகவான் பிக்ஷாடந மூர்த்தியாகச் சென்றார். அன்பே பக்தி எனப்படும். அன்பு வடிவனை சிவனிடம் மயங்காதவர் உண்டோ? ரிஷி பத்நிகள் அவரை வரவேற்று பிக்ஷை தரும் வ்யாஜமாக அவருடன் சிருங்காரமாகப் பேசிக் களித்தார்கள். பிக்ஷையுடன் தங்கள் வளைகளையும் அளித்து எங்கள் வளையைத் தாரும் என்றனர். இதைக் கண்ட கணவர்கள் பூமியிலே பெண்ணாகப் பிறவுங்கள் எனச் சபித்தனர். எப்போது பாபமகலும்? என வேண்ட, பாண்டிய நாட்டிலே பகவான் வளையல்காரனாக வந்து உங்களைத்தீண்டியவுடன் நற்கதி பெறுவீர்கள் என்றனர். அதற்காக பகவான் வளைச்செட்டியாக வந்து அந்த ஸ்த்ரீகளுக்கு வளையலிட்டு தன் வலையிலும் இட்டார். அவர்கள் கைலாஸம் சென்றனர்.

**வலய விகரயாய நம:**

## அஷ்டமகாஸித்தி உபதேசித்தல்.

ஸ்கந்தனுக்குப் பால் கொடுத்த ஆறு கிருத்திகா தேவிகள் சிவனை வணங்கி அஷ்டமகா ஸித்திகளைத் தங்களுக்கு உபதேசிக்கும்படி வேண்டினர். ஸகல கலா நிதியான பகவான் அவைகள் உமைக்குத் தோழிகளாக இருக்கின்றன. தேவியை உபாஸித்து இந்த ஸித்திகளைப் பெறுவீர்கள் என உபதேசித்தார்.

---

# ஆயுர் வேதம். (7)

டாக்டர், V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.

**குறிப்பு:** — ஜ்வரங்களில் மலபந்தம் இருப்பின், ரோஜா மொக்கு, நில ஆவாரை, சிவந்தை வேர், கடுக்காய், கொட்டை திராக்ஷை, கடுகு ரோகிணி, வாய்விடங்கம் இவைகளில் ஒன்று அல்லது இரண்டு வஸ்துக்களை கஷாயத்தில் சேர்க்கலாம்.

### நவீன மருந்துகள்.

1. **வாத ஜ்வரத்தில்** – ஸோடா ஸாலி ஸிலல் 10 க்ரெய்ன்ஸ், ஸோடாபைகார்பனேட் 20–க்ரெய்ன்ஸ் கலந்து சுக்கு கிஷாயம் ஒரு அவுன்ஸில் தினம் மூன்று தரம் சாப்பிடவும். **2. பித்த ஜ்வரத்தில்** - பொடாஸியம் ஸிட்ரஸ் 20 கிரெய்ன்ஸ், ஸோடா பைகார்பனேட் 15 கிரெய்ன்ஸ், நிலவேம்பு கிஷாயம் 1 அவுன்ஸில் தினம் மூன்று தடவை சாப்பிடவும். **3. கப ஜ்வரத்தில்** - ஸிபொஸால் அல்லது எல்கோஸின் என்ற மாத்திரையை நாலு மணிக்கொருதரம் ஒரு மாத்திரை ஒரு அவுன்ஸ் ஜலத்துடன் சாப்பிட்டு விட்டு ஒரு டம்ளர் ஜலம் பிறகு உட்கொள்ளவும். 8 முதல் 10 மாத்திரைகள் உபயோகித்தும் ஜ்வரம் தணியாவிடில் மேற்கொண்டு மாத்திரைகள் சாப்பிடுவதற்கும், பெனிஸிலின் போன்ற இன்ஜெக்ஷன் எடுத்துக் கொள்வதற்கும், டாக்டரிடம் காண்பிக்கவும். **4. ஜ்வரத்தில் தலைவலி** – முதலியவை அதிகமாய் இருந்தால் எ. பி. ஸி. அல்லது கோடோபைரின் அல்லது ஆஸ்பிரோ போன்ற மாத்திரைகளை 6-மணிக் கொருதரம். ஒன்று சாப்பிடலாம். மொத்தத்தில் நாலுதடவைக்குமேல் சாப்பிடுவது நல்லதல்ல. **5. விஷம ஜ்வரத்தில்** – க்வினின் சல்பேட் 5 க்ரெ. மாத்திரைகளை ஒன்று 4 - மணிக்கொருதரம் மூன்று நாளைக்குச் சாப்பிடலாம். அல்லது நிவாக்வின் என்ற மாத்திரை யொன்றை தினம் இரு முறை 2-நாள் உட்கொள்ளலாம். சாதாரணமாய் விஷம ஜ்வரங்கள் மலேரியா என்ற வியாதியில் சேரும். இது அனபிலீஸ் என்ற வகையில் பெண் கொசுக்களின் கடிகளால்

---

அஶ்வினீ — அஶ்வினீ தேவதைகள்

பரவுகிறது. ஆதலால் கொசுக்களை ஒழிப்பதும், அவைகள் கடிக்க விடாமல் கொசுவலை முதலியன உபயோகிப்பதும் அவசியம்.

குறிப்பு – மேற் கூறப்பட்ட சிகித்ஸைகளுக்கு வசப்படாமல் ஜ்வரம் நீடித்தால் வைத்ய நிபுணர்களால், சரியான சோதனைகள் செய்து, வியாதியின் நிதானத்தைக் கண்டறிய வேண்டும். அதன் பிறகு அவற்றிற் கேற்ற சிகித்ஸைகளை மேற்கொள்வது முறை. இப்படிப்பட்ட வியாதிகளில் சில பின்வருவன.

*1. கால அஸார்*–இங்கு ஜ்வரத்துடன் யக்ருத்(லிவர்)தும், பிலீஹ (ஸ்பிலீன்) மும் பருத்திருக்கும். தேகத்தில் ஆங்காங்கு கருமை நிறம் படர்ந்திருக்கும். *2. ட்யூபர் குலோஸஸ்* – இது சாதாரணமாய் மார்பையும் நுரையீரலையும் தாக்கும். சிலவேளைகளில் உடம்பு மெலிந்து போவதால் க்ஷயம் என இதைச்சொல்லுவார்கள். ஆனால் க்ஷயரோகம் ட்யுபர் குலோஸஸ் இல்லாமலும் இருக்கலாம். மேலும் ட்யுபர்குலோஸஸ் தேகத்தில் எந்த தாதுக்களையும், அங்கங்களையும் தாக்கலாம். முக்கியமாய் ஸாயந்திரத்தில் விடாஜ்வரம், இரவில் அதிக வியர்வை, ஒய்ச்சல், அஜீர்ணம் முதலியன குறிகுணங்கள். *3 பைலேரியாஸிஸ்* – துடையிடுக்கு, அக்குள் முதலிய இடங்களில் நரிகட்டிக்கொண்டு குளிர் ஜ்வரம் காணும். அச்சமயம் கை, கால், அண்டம் முதலிய ஏதாவது ஒரு இடத்தில் வீக்கம் காணும். அடிக்கடி இம்மாதிரி வந்து வீக்கம் தங்கி விடும். அநேகமாய் கால்களில் வீக்கம். இதை யானைக் கால் ஜ்வரம் என்பார்கள். *4. ஹ்ருதயத்திலுள்ள வால்விஸ் என்ற ஜவ்வில் உண்டாகும் அழற்சியால்* மாதக் கணக்கில் ஜ்வரம் விடாமல் இருந்து வரும். *5.* தேகத்தில் காணும் கட்டிகள், அம்மைகள், சீழ்பிடித்த அடிகள் அல்லது விரணங்கள் இவைகளிலும் சாதாண மருந்துகளுக்கு ஜ்வரம் தணியாது.

## ஔஷத வர்க்கங்கள்.

திரிகடுகு என்ற வர்க்கம் போல திரிபலை என்பதும் ஒன்று. இதில் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்

---

என மூன்று அடங்கியுள்ளன. யூநாநி வைத்தியர்கள் இதை அதிகம் உபயோகிக்கிருர்கள்.

**கடுக்காய்** - இதன் பரியாயப் பெயர்களில் ஒன்று அம்ருத என்பது. அம்ருதத்திற்கு சம குணமுடையது. தாயைப்போல தேகத்தைப் பரிபாலிக்கும். இதில் லவணம் தவிர மற்ற ருசிகள் உண்டு. மதுரவிபாகமடையும். உஷ்ண வீர்யம் கொண்டது. **திரிதோஷஹரம்** - மேதை (புத்தி), ஸ்ம்ருதி (ஞாபக சக்தி), கண்ணின் பார்வை சக்தி, ஆயுட்காலம் இவைகளை விருத்திசெய்யும். **லகு**: பிரம்மணம் (புஷ்டியைத்தரும்), அநுலோமனம் (மலபந்தத்தை நீக்கும்) முதலிய குணங்களுடையது. சுவாஸம், காஸம், பிரமேகம், குஷ்டம், சோபம், குல்மம், ஹ்ருத்ரோகம், விஸர்ப்பம், விரணம், கண்டரோகம் முதலிய வியாதிகளைப் போக்கும்.

அரை முதல் ஒரு தோலா கடுக்காய் சூர்ணத்தை நெய்யுடன் உட்கொள்ளில் வாதஹரம். சர்க்கரையுடன் சாப்பிட்டால் பித்தஹரம். உப்புடன் உட்கொண்டால் கபஹரம். வெல்லத்துடன் எடுத்துக்கொண்டால் ஸர்வ ரோகஹரம்.

சிலருக்கு கடுக்காய் உபயோகிக்கக்கூடாது. உதாரணம் - நடந்து இளைத்தவன், பலமற்றவன், மெலிந்தவன், வறண்டிருப்பவன், பட்டினி கிடப்பவன், பித்தப்பிரக்ருதி, கர்ப்பிணிகள் முதலியவர்கள்.

(1) ரத்த மூலத்தில் வெல்லத்துடன் சாப்பிடவும். (2) விக்கலிலும் பக்குவாதிசாரத்திலும் வெந்நீருடன் உட்கொள்ளவும். (3) கபபாண்டுவில் கோமூத்திரத்தில் ஊரவைத்த கடுக்காய் நல்லது. (4) வாந்தியில் தேனுடன் அருந்தவும். (5) பித்த சூலையில் நெய்யிலாவது வெல்லத்திலாவது தரலாம். (6) அதிமூத்திரம் கடுக்காய் கஷாயத்தை சூடாய் சாப்பிடத் தீரும். (7) கடுக்காயும் காசுகட்டியும் சமபாகமெடுத்து அரைத்து நாக்கு விரணங்களில் தடவ அவைபோம். (8) கடுக்காய்தோல் கிராம்பு அல்லது லவங்கப்பட்டை வராகனிடை ஒன்று எடுத்து முக்கால் ஆழாக்கு நீர் விட்டு பத்து நிமிஷம்

---

நக்ஷத்ர ஹோமத்தில் இவர்களுக்கு நமம.

காய்ச்சி வடிகட்டி உபயோகிக்க, மலமிளகி வயிற்றுக் கடுப்பு நீங்கும். (9) மேற்சொன்ன சரக்குகளை பாலில் காய்ச்சி உபயோகிக்க சீதபேதி அடங்கும். (10) கடுக்காய் லேகியம்-(கடுக்காய்-25 பலம் இடித்து 4 படி ஜலத்தில் போட்டு அரைப்படியாகக் காய்ச்சி வடிகட்டி இரண்டரை பலம் சர்க்கரைச் சேர்த்து பாகு செய்து, அதில் சிவதை, இஞ்சி, மிளகு, ஓமம், வாய்விடங்கம், திப்பிலி, வகைக்குக் கால்பலம் எடுத்துக்கொண்டு அரைத்துப்போட்டு, பசுவின் நெய் கால்படி விட்டு லேகியம் செய்யவும்.) புன்னைக்காய் அளவு காலை மாலை உட்கொள்ள, அக்னிமாந்தியம், சூலை, மலசலக்கட்டு, வாயு மூலம் இவை போம். (11) அபயாமலக ரஸாயனம் ஒரு தோலா அளவு தினம் இரு முறை உட்கொண்டால் கிழத்தன்மை நீங்கும். மனோதிடமுண்டாகும்.

ஜ்வரத்திற்கு அடுத்த சாதாரணமாகக் காணும் வியாதி **அதிஸாரம்** எனப்படும். அதிக தடவைகள் திரவமாக மலம் போதல், பிரவாஹிகை, கிரஹணி, விஷூசி என்பவைகளும் இதில் அடங்கும். பொதுவாக இவைகளை பேதி, சீதபேதி, கிராணிபேதி, வாந்திபேதி என்று கூறுவார்கள்.

**நிதானம்** – அளவிலும் குணத்திலும் மாறுபட்டதும் காலத்திற்குத் தக்கதல்லாததுமான உணவுகள், கெட்ட ஜலங்கள், சில விஷங்கள், க்ருமிகள், அமித மதுபானம், பயம் முதலிய மன க்லேசங்கள், வஸ்தி-விரேசணம் போன்ற சோதன சிகித்ஸைகளைச் சரியாகச் செய்யாதிருத்தல், மிதமிஞ்சிய கிரீடைகள், வேகங்களை யடக்குதல் போன்ற காரணங்களால் அதிஸாரரோகம் உண்டாகும்.

**வகைகள்**–வாதாதிஸாரம், பித்தாதிஸாரம், கபாதிஸாரம், ஸந்நிபாதாதிஸாரம், சோகாதிஸாரம், ஆமாதிஸாரம், இரக்தாதிஸாரம், பிரவாஹிகை, கிரஹணி, விஷூசீ, பிரவாஹிகையிலும், கிரஹணியிலும் உட்பிரிவுகள் உண்டு.

---

**என உத்தேச த்யாகம் கூறவேண்டும்.**

# விநாயக புராணம்.

## சூர, சபலர் எனும் தூதர்கள். *(சித்திரைமீ தொடர்ச்சி)*

பாதாள லோகத்தில் விநாயகர் பாதங்களிருந்தன. விநாயகர் சுரனு? நரனு? ஆணு? பெண்ணு? தன்னைச் சார்ந்தவரா? அல்லவா? தன் நிலை தூக்கமா? ஸ்வப்பனமா? விழிப்பா? அவர் உயிருள்ளவரா? இல்லையா? என்று ஒன் றும்தெரியாமல் நராந்தகன் விழித்தான். இந்நிலையில் தான் தனக்கு மரணமென்பதையு முணர்ந்தான். அச்சமயம் விநாயகர் மத்குணமெனும் மூட்டைப் பூச்சியைப்போல் காலால் தேய்த்து அவனை நசுக்கினர். அதைக்கண்டவான வர் ஜய விஜயீபவ! என வாழ்த்தினர். மலர் மாரி பொழிந்தனர். வேதசொற்களால் போற்றினர். அவரது விராட் ரூபம் மறைந்தது. சிறு குழந்தையாக ஆனர். காசிராஜன் அவர் திருவடியை வணங்கி, ப்ரபோ! பாதி பாரத்தைக் குறைத்தீர்! மற்றொரு பகுதியையும் அகற்றி உலகிற்கு க்ஷேமத்தை உண்டுபண்ணவேண்டும் என்றார். தேவர்களும் அதையே வேண்டினர். எல்லோரும் விநாய கரையும் காசிராஜனையும் கொண்டாடினர்.

நராந்தகனது தலை பெற்றோர் வீட்டில் வந்து விழ சாரதா எனும் அவன் தாய் புத்திரனது சிரஸைக்கண்டு கதறினள்! பதறினள்! ரௌத்ரகேது எனும் தந்தையும் மூர்ச்சையாகி விழுந்தார். எழுந்து புலம்பினர். ஐயோ! உலகையெலாம் ஜயித்த உனது தலையை அறுத்தவன் யார்? உன் வரமெங்கே? உன் பலமெங்கே? உன் ஸேனை எங்கே? எதனுலிறந்தாய்? எப்படி இறந்தாய்? நாங்கள் ஏதேனும் குற்றம் செய்தோமா? எங்கு சென்றாய்? எங்களையும் அழைத்துச்செல்! ஒவ்வொரு நாளும் உலகை ஜயித்து வந்து எங்களிடம் ஜயத்தைக் கூறுவாயே! இன்று நீ ஏன் வரவில்லை? எனப் பலவாறு கதறினர்கள். அந்த தலையை எடுத்துக்கொண்டு தேவாந் தகனிடம் சென்றார்கள். அவனும் அதைக் கண்டு கதறி யழுதான். ஐயோ! நாமிருவரும் ஸமமாக உண்போமே! உடுப்போமே! என்னைவிட்டு எங்கு சென்றனை! என்னை யும் உன் மனைவியையும் நம் பெற்றோரையும் விட்டுவிட்டு எங்கு சென்றனை? எனக் கதறும்பொழுது வீரர்கள் பலர் சூழ்ந்து பற்பல சொற்களால் அவனைத் தேற்றினர்கள்.

மந்த்ரிகளும் மஹா ஜனங்களும், தைத்யேந்த்ர! இறந்த வீரனை நாடி வீரனான தாங்கள் கவலைப்படக் கூடாது. வீரனுக்கு ஏற்ற கார்யங்களைச் செய்யுங்கள்! என்று கூறி தேவாந்தகனை ஸமாதானப்படுத்தினார்கள். அவன் தன் பெற்றோரைத் தேற்றி விநாயகரைக் கொன்று வருவதாகக் கூறினான். ரௌத்ரகேது "நராந்தகன் காசி ராஜனுடன் சென்ற விநாயகரைக் கொல்ல ஐநூறு அரக்கர்களை யனுப்பினான். அவர்களில் ஒருவர் கூடத் திரும்பவில்லை. ஆதலால் நீ, மிக்கபராக்ரமசாலியான விநாயகரை ஜாக்ரதையாகக் கொன்றுவா" வென அனுப்பினான். தேவாந்தகன், இந்த்ராதி லோகங்களில் அதிகாரிகளாக அமர்த்தப்பட்ட அரக்கர்களை எல்லாம் ஸேனைகளுடன் வரும்படி ஆணையிட்டு அபரிமிதமான ஸேனைகளுடன் காசிநகரைத் தாக்கினான். திடீரென லக்ஷக்கணக்கான ராக்ஷஸர்கள் காசியை நாசம் செய்வதைக் கண்டு காசி ராஜன் பயந்து நடுங்கினான். சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும் விநாயகரை வேண்டினான். அரசனை ஆச்வாஸப்படுத்தி, ஸித்தி புத்திகளுடன் ஸிம்மவாஹனத்தில் ஏறி வில்லம்புகளை ஏந்தி போருக்குச் சென்றார். அஸுர ஸேனைகள் நகரத்தைச் சுற்றியிருப்பதைக் கண்டு ஆகாய மார்க்கமாக வெளியிற் சென்று ஸிம்ஹநாதம் செய்தார். கோடிக்கணக்கான ஸேனைகளுடன் வந்திருக்கும் தேவாந்தகனுடன், நான் தனியே யுத்தம் செய்வது நல்லதல்ல. அவர்களுக்கு ஏற்றபடி ஸேனையைப் படையென்று ஸித்திக்கு உத்தரவு இட்டார் கணேசர்.

அணிமா முதலிய அஷ்டமாஸித்திகள் எண்ணிறந்த ஸித்திகளைப் படைத்தனர். அளவற்ற ஸேனைகளைப் படைத்து ஸித்திதேவி போர்முனையில் நின்றாள். உக்ரமான இந்த ஸேனையைக்கண்டு சினங்கொண்டான் அஸுரன். பகைவரைக் கொல்வேன் அல்லது கொல்லப் படுவேன், வேறு வகையில் திரும்பமாட்டேன் என்று கூறி யுத்தத்திற்குக் கிளம்பினான். அவனைத் தடுத்து கர்த்தமன் தீர்க்கதந்தன் என்ற இருவர்களும் ரதவ்யூஹம், சக்ரவ்யூஹம் என்ற வ்யூஹங்களை யமைத்துக் கொண்டு அணிமாதி ஸித்திகளுடன் பயங்கரமாகப் போரிட்டனர். அணிமாதி சக்திகளின் பாணவர்ஷத்தால் அஸுரஸேனையில் அனேகரழிந்தனர். பலரது கைகால்கள், தலைகள்

அறுபட்டு விழ்ந்தன. தலையில்லாத கபந்தங்களும், கால் களாலும் கைகளாலும் கணேசனது ஸேனைகளுடன் யுத்தம் செய்தன.

இறந்த ராக்ஷஸ ஸேனைகளனைத்தையும் அசுர குருவான சுக்ராசார்யர் ம்ருதஸஞ்ஜீவினீ என்ற வித்யையால் எழுப்பினர். இதை ஒரு ஸக்தி ஈசிதா எனும் சக்தியிடம் அறிவிக்க அவள் கோபங்கொண்டாள். அக்கோபத்தி லிருந்து ஒரு பயங்கரமான ''க்ருத்யா'' என்பவள் தோன்றி, யான் என்ன செய்யவேண்டும்? என ப்ரார்த் தித்தாள். சுக்ரரை அப்புறப்படுத்து என்று கூற அவள் அஸுர குருவைத் தூக்கி இரு கால்களுக்கிடையே அடக்கி பர்பரதேசத்தில் எறிந்துவந்தாள். அதனுலவர் பர்பரர் எனப்படுகிருர். காலாந்தகன் எனும் அசுரன் ப்ராகாம்ய ஸித்தியோடு யுத்தம் செய்தான். அவள் ஒரு பர்வத சிக ரத்தை அவன் மீது எறிய அப்படியே கிழ்விழ்ந்து இறந் தான். முசலன் முதலிய அஸுரர் அவளுடன் போருக்கு வர, நாலு மலைகளைத் தூக்கி எறிந்து அவர்களையும் கொன்ருள். அணிமா, கர்த்தமன் கழுத்தை அறுத்துக் கிழேதள்ளினுர். யக்ஷ்மாஸுரன், காலதந்தன், தீர்க்க தந்தன் என்ற அஸுரவீரர்களை மரங்களைப் பிடுங்கி எறிந்து மஹிமா என்பவள் கொன்ருள்.

கண்டாஸுரன், ரக்தகேசன், துர்ஜயன் முதலியவர்கள் தேவஸேனையைக் கொன்று குவித்தார்கள். மஹிமாஸித்தியும் புத்தியும் முஷ்டியினுல் அடித்து அவர்களைக் கொன்ருர்கள். முக்யமான தைத்யவீரர்கள் இறந்த பின் அணிமாதி ஸித்திகள் ஸந்தோஷ ஆரவாரம் செய்தனர். தேவாந்தகனது தூண்டுதலால் மற்றும் பல வீரர்கள், ஸித்தி ஸேனையைக் கொல்வோம், முறியடிப்போம் என்று கூறிக்கொண்டு மறுபடியும் போருக்கு வந்தனர். எங்கும் ஒரே இருள் சூழ மின்னல்போல் ஒளிக்கும் ஓஷதிகளைக்கொண்டு அதன் ப்ரகாசத்தில் யுத்தம் செய்தனர். ரத்த ஆறும் பிணக்குன்றும் ராக்ஷஸர்களின் அழுகைச் சத்தமும் தேவாந்தகனுக்குத் துன்பத்தைத் தந்தன. அதனுல் அவன் பலவகையாகயோசித்துக் கலங்கினுன். சிறுவனுன வீநாயகனும் அஷ்டஸித்திகளும் செய்யும் கோரமான யுத்தத்தை இதுவரை யான் எங்கும்

கண்டதில்லை என்று ஆக்ரஹத்துடன், கையில் கத்தியேந்தி ஸித்தி ஸைன்யங்களைக் கொன்று குவித்தான். பலர் விநயகனை நினைத்துக்கொண்டே இறந்தனர். உக்ரமான தேவாந்தகனைக் கண்டவுடனேயே சிலர் உயிர் துறந்தனர். ஸித்திகள் பர்வதங்களைத் தூக்கி வந்து அவனது சக்தியின் மீது எறிந்தனர். அசுர சக்தி ஆகாயத்தில் மறைந்துவிட அதை எடுத்துவந்து ஸித்திகள் அதனாலேயே அசுர ஸேனையைக்கொன்றார்கள். அக்கத்தியினால் பலமுறை வெட்டியும் தேவாந்தகனது தலை அறுபடாததைக் கண்டு ஆச்சர்யப் பட்டார்கள். இரவும் பகலும் ஓயாமல் மூன்றுநாள் உக்ர மான யுத்தம் நடைபெற்றது. தேவாந்தகன் ஒவ்வொரு ஸித்தியின் மீதும் பற்பலவிதமான பாணங்களை எய்தினான். ஆதலால் களைத்து அவர்கள் கீழே விழுந்தனர். இதைக் கண்ட புத்தி, விநாயகரை வணங்கித் தான் போருக்குச் செல்ல உத்தரவு கேட்டாள். ஜயத்துடன் வா வென அவர் ஆசீர்வதித்து அனுப்பினார். அவள் யுத்தரங்கத்திற்கு வந்து ஒரு கர்ஜனை செய்தாள். அதைக் கேட்டு மூவ்வுலகும் நடுங்கிற்று. பல அஸுரர்கள் பூமியில் வீழ்ந்தனர். புத்தியின் முகத்திலிருந்து பயங்கர மானதோர் சக்தி உண்டாயிற்று. அவள் பயங்கரமான அக்னிபோல் வாயிலிருந்தும் கண்களிலிருந்தும் நெருப்பைக் கக்கிக்கொண்டு அஸுரஸேனையை நாசம்செய்தாள்.

இதைக் கண்டு அஸுர ஸேனை பயந்தோடிற்று. அச்சேனை கதறும் சப்தத்தைக் கேட்டு தேவாந்தகன் வில்லை வளைத்து எண்ணிறந்த பாணங்களை அவள் மீது வர்ஷித்தான். அந்த பாணங்களை எல்லாம் அவள் விழுங்கி தேவாந்தகன் களைத்திருப்பதைக் கண்டு அவன் ஸேனையிலுள்ள எல்லோரையும் பக்ஷித்தாள். சிலரைக் கைகளாலும் சிலரைச் சூலத்தில் ஏந்தியும் கொன்றாள். இதைக் கண்டு பலரும் பயந்து நடுங்கி ஓடினர். ஆங்காங்கு ஓடி அனைவரையும் பக்ஷித்தாள். தேவாந்தகன் என்ன செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் திக்குத்திக்காக ஓடி ஒளிய ஆரம்பித்தான். க்ருத்யையும் அவனைப் பின் தொடர்ந்து பதினான்கு லோகங்களையும் சுத்தி அவன் மயிரைப்பிடித்து இழுத்து இரு கால்களிடையே அழுத்திக் கொண்டு ஸித்தியிடம் வந்து சேர்ந்தாள்.

மிக்க விகாரமாயும் பயங்கரமாயும் உள்ள அந்த க்ருத்யை விநாயகரை வணங்குங்கால் சற்று தூரத்தில் நிற்கும்படிச் செய்தார். அவளைக் கண்டவுடன் தேவஸேனை யிலும் சிலர் பயந்து விழுந்தனர். சிலரோடினர். சிலர் திகைத்து நின்றனர். தேவாந்தகனையும் அவனது ஸேனை களையும் பக்ஷித்து வந்தேன் என்று அவள் கூறித் தான் களைப்பாற ஏகாந்தமான இடம் தந்தருளவேணுமென்ருள். உன்னிடமிருந்து நழுவி தேவாந்தகன் தப்பியோடி விட் டான். நீ என் முகத்திலிருந்து வந்ததால் அங்கேயே செல் என ஸித்தி அவளை விழுங்கிஞள். க்ருத்யையின் துடை களிலிருந்து நழுவிய அசுரன் தனது தேகத்திலுள்ள துர்க்கந்தம் நீங்க நதியில் ஸ்நானம் செய்து அவமான மடைந்து பெற்ருேர் திருவடியை வணங்கிப் போற்றிஞன். அவன் மூலமாக ஸகல விஷயங்களையு மறிந்த அவர்களும் மிகவும் வருந்தினர். நன்கு யோசித்து பீஜாக்ஷரத்துடன் அகோர மந்திரத்தை உபதேசித்து இதைக்கொண்டு ஒரு யாகம்செய், தர்ப்பணம், ஹோமம், ஸமாராதனை முதலிய வைகளால் சிவனை ஸந்தோஷப் படுத்து. அக்னிகுண்டத்தி லிருந்து வரும் அச்வத்தின் மீது அமர்ந்து ஸகல சத்ருக் களையும் வென்று வா! என்ருர். அங்ஙனமே அவரும் தனயனும் ஒன்று சேர்ந்து ஜபம் தர்ப்பணம் முதலியவை களை முடித்து ஐந்து ப்ரேதங்களை ஆஸனமாக அமைத்து அதன்மீது அமர்ந்து ஹோமம்செய்தார்கள். மாம்ஸத்தை அறுத்து ஹோமம் செய்தார்கள். முடிவில் தேவாந்தக னது சிரஸ்ஸை வெட்டி பூர்ணாஹுதி செய்தார் தந்தை. ஈசனுடைய அருளால் அவனுக்குத் தலை மறுபடி உண் டாயிற்று. பிராம்மண போஜனம் முதலியன செய்து முடித்தனர். காலையில் அக்னி குண்டத்திலிருந்து மிகப் பயங்கரமானதோர் குதிரை தோன்றிற்று. அக் குதிரை யின் மீது ஏறி தேவாந்தகன் யுத்தத்திற்கு வந்தான். அச்வத்தின் சப்தத்திஞலேயே தேவ ஸேனையில் பலர் இறந்தனர். அதன் கால்களால் சிலர் காயமடைந்தனர். அவன் சூலத்திஞல் பலரைக் கொல்ல தேவஸேனை பயந் தோடிற்று. இதைக் கண்ட விநாயகர் ஸிம்ஹவாஹனத் தில் ஏறி யுத்தத்திற்குவந்தார். அவரைக்கண்டு நகைத்து தேவாந்தகன், நீ ஒன்றுமறியாத சிறுவன்! தாய் மடியி லிருந்து பால் குடிக்கும் பாலகன்! உலகெலாம் எரித்த

உத்தம வீரனோடு போர் செய்ய எங்ஙனம் துணிந்தாய்? என்றான். விநயகர், மதுபானம் செய்து மதியிழந்த நீ பெண்ணின் துடையிலகப்பட்டு பயந்தோடி வெட்கமில்லாமல் வீரவாதம் செய்கின்றாயே! என்றார்.

இருவரும் கன கடுமையாக போர்புரிந்தனர். எண்ணிறந்த பாணங்கள் மழைக்கால்போல் சொறிந்தனர். ஒரு நிமிஷம் பாணம் பகைவர் ஸேனையை மூட, அதை அகற்றி அரை க்ஷணத்துக்குள் மற்றோர் ஶரக் கூட்டை உண்டுபண்ணுவர். தேவாந்தகன் நூற்றெட்டு முறை மந்த்ர ஜபம்செய்து கஜாஸ்த்ரம் எய்தினன். எங்கும் ஒரே யானைகள் வீலிட்டுக்கொண்டு ஸித்தி ஸேனையை நாசம் செய்தன. விநயகர் ஸிம்மாஸ்த்ரத்தை ஏவ, அதனால் ஸகல யானைகளும் மாண்டன. அஸுரன் ஶார்தூல அஸ்த்ரத்தை விட, விநயகருடைய சிம்மாஸ்த்ரத்தினால் புலிகள் மாண்டன. கந்தர்வாஸ்த்ரம் முதலியவைகளால் தூக்கமும் மயக்கமும் உண்டாக்கி தேவாந்தகன் ஆங்கு ஓர் அக்னி குண்டத்தை அமைத்து ஆபிசார வேள்வி செய்தான். நர மாம்ஸத்தையும் ரத்தத்தையும் திகம்பரனாக இருந்து ஹோமம் செய்தான். அதிலிருந்து கிளம்பிய கோரமான ஶக்தி பசி, பசி என்று கதற, அதற்கு அபரிமிதமான நரமாம்ஸம் அளித்தான். அது, யான் உனக்கு என்ன செய்யவேண்டும்? என்று கேட்க, தேவஸேனையையும் விநயகரையும் கொன்றுவா என்றான். அந்த ஶக்தி அஸுரருடன் ஆகாயத்தில் கிளம்பி அட்டஹாஸத்துடன் தேவஸேனையைக் கொன்றது. காசிராஜன் விநாயகரிடம் முறையிட அவர் க[1]ண்டா அஸ்த்ரத்தினலும் க[2]கா அஸ்த்ரத்தினலும் மோஹமடைந்த தன் ஸேனையை எழுப்பி சத்ரு ஸேனையைக் கொன்றார்.

அஸுரன் கட்காஸ்த்ரத்தை விட அது விநாயகர் அஸ்த்ரத்தையும் ஸித்தி ஸேனையையும் நாசம் செய்தது. விநாயகர் வஜ்ராஸ்திரத்தினல் அதைப் பொடியாக்கினர். தேவாந்தகன் ரௌத்ராஸ்திரத்தை ப்ரயோகம் செய்ய விநயகர் ப்ரம்மாஸ்த்திரத்தினல் தடுத்தார். இவ்விரண்டும் போர் புரியும் போது உலகெலாம் சத்தம், பயம், நடுக்கம் ஏற்பட்டது. தனது சக்தியும் பாணமும் வீணாவதைப் பார்த்த தேவாந்தகன் எல்லாவற்றையும் அழிக்கத்

தக்க ஶக்தி அஸ்த்ரத்தைப் பிரயோகம் செய்தான். அதை தனது பாணங்களால் அடித்துத்தள்ள இரவும் பகலும் ஓயாமல் யுத்தம் நடந்தது. ஸாமான்யமாக இவரை வெல்ல முடியாதென அஸுரன் மாயையினல் அதிதியைப் படைத்து அவர் எதிரே அவளது வஸ்த்ரத்தை அவிழ்த்து மானபங்கம் செய்தான். மாயா அதிதி விநயகனைப் பார்த்து உனது எதிரே எனக்கு இந்தகதி நேர்ந்ததே? என்று புலம்பினுள். ஸர்வக்ஞனை விநயகனும் தாய் என்றவுடனே துக்கம்கொண்டு மெய்மறந்து ஏன் உயிரை வைத்துக்கொண்டு இருக்கிருேமென்று புலம்பினுர்.

அதற்குள் அஸுரன் உன் எதிரிலேயே உன் தாய் தலையை வெட்டுகிறேன் என்று கத்தியை உருவினுன். ஆகாயத்திலிருந்து ஓ மாயையைக்கடந்த மஹேஶ்வர! மஹ நீய! இது மாயையென்றறியாயோ! என்று ஒரு வாக்கு தோன்றிற்று. அதைக் கேட்ட விநயகர் ஆச்சர்யமடைந்து சிவன் தந்த வரத்தைச் சிந்தித்து உஷ:காலத்தில் யுத்தம் செய்யக்கருதினுர். யானைமுகமும் நரசரீரமும் கலந்த உருவமெடுத்து தேவாந்தகனை யிழுத்து மடியில் படுக்க வைத்தார். அவன் விநாயகரது தந்தத்தைப் பிடுங்க அதைக்கொண்டே கணபதி அவனைக் கொன்று வீழ்த்தினுர். அவனது உடலிலிருந்து கிளம்பிய ஜ்யோதிர் மயமான ஜீவன் விநயகரின் திருவடியில் வந்து லயித்தது. ஆகாஶத்தில் தேவதுந்துபி முழங்க தேவர் பூமாரிப் பொழிய ஜய விஜயீபவ என வாழ்த்தினர். உபேந்த்ரனைப்போல் தேவர்க்கு உதவி புரிந்ததால் உம்மையும் உபேந்த்ரன் என அழைக்கின்ருேம் என்றனர் தேவர். காசி ராஜனும் அவர் திருவடியில் விழுந்து வணங்கி வெற்றி நாதத்துடன் நகர ப்ரவேசம் செய்தான்.

எல்லோரும் விநாயகரைக் கொண்டாடினர். ராஜ புத்ரனுக்கு விவாஹத்தைச் செய்வித்து அவர் எல்லோரிடமும் விடை பெற்றுக் கிளம்பினுர். அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் சிறுவர்களும் பெரியோர்களும் அவரைப் பின்தொடர்ந்தனர். நான் சென்ருலும் உங்கள் உள்ளத்திலேயே தான் இருக்கின்றேன். என்னைப் போன்ற ஒரு உருவத்தைச் செய்து பக்தியுடன் பூஜை செய்தால் நீங்கள் வேண்டிய ஸகல பலன்களுமுண்டாகும்

எனக் கூறி கஶ்யபருடைய ஆஶ்ரமத்திற்குச் சென்றார். அதிதியும் கஶ்யபரும் இவரை வரவேற்று ஆனந்த பாஷ்பம் பெருகி பேரானந்தமடைந்தனர். இவ்வளவு அஸுரர்களையும் வென்று வெற்றியுடன் வந்த வீர புத்ர னுக்குத் தயிரன்னத்தினால் த்ருஷ்டிக் கழித்தாள். அரசன் விடைபெற்று காஶி நகரம் சென்றான். விநாயகர் பெற் றோரை நோக்கி தான் வந்தகார்யம் முடிந்துவிட்டதால் தன் இருப்பிடம் செல்கிறேன் என்றார். மறுபடியும் நான் உன்னை எங்கே காண்பது? என இருவரும் கேழ்க்க பவானி யின் ஆலயத்தில் காண்பீர்கள் என்று கூறி மறைந்தார் கணேஶர். தங்களது ஆஶ்ரமத்தில் அவரது மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்து தினமும் பூஜித்து வந்தனர். இச்சரி தத்தைக் கேட்பவரும் படிப்பவரும் வேண்டிய பலனைப் பெற்று நற்கதி பெறுவார்கள்.

## மயூரேச அவதாரம். ஸிந்து வதம்.

த்ரேதாயுகத்தில் மைதிலதேசத்தில் கண்டகிநகரத் தில் சக்ரபாணி என்றோர் அரசன் இருந்தான். அவன் பெயருக்கேற்றபடி எல்லா வகையிலும் மஹாவிஷ்ணுவை ஒத்துஇருந்தான். அவனது பத்னி உக்ரா என்பவள் மஹா லக்ஷ்மி போலிருந்தாள். ஸாம்பன், ஸுபோதனனென்ற இருமந்திரிகளுடன் மனுநீதி தவறாமல் ராஜ்யபரிபாலனம் செய்துவந்தான். ஸகலவிதமான பாக்யமிருந்தும் புத்திர பாக்யம் மட்டுமில்லாமல் மிக்க வருந்தினான். குடிகளை அழைத்து மஹா ஜனங்களே! ராஜ்யத்தை விட்டு கான கஞ்சென்று தவம் செய்கிறேன். இறைவன் அருளால் ஸந்ததியுண்டானால் இங்குவருகிறேன். இல்லையேல் அங்கு இருந்தே மோக்ஷம்பெறமுயற்சிப்பேன் என்றான். வேந்தே! குழந்தைகள் போன்ற எங்களை விட்டு விட்டு தாங்கள் செல்வது நியாயமல்ல? தாங்கள் போவதாக நிச்சயித் தால் நாங்களும் கூட வருவோம் என்றார்கள். அச்சமயம் எதிர் பாராவண்ணம் ஸகல சாஸ்த்திரங்களும் கற்று உணர்ந்த ஶௌனகர் எனும் முனிவர் வந்தார். அரசன் அவரைத் தக்கப்படி பூஜித்து வணங்கினான். மஹாராஜன்! உமக்கு கவலை வேண்டாம். அருமையான புதல்வன் பிறக்கப்போகின்றான். இது ஸத்யமென ஆசீர்வதித்தார். மகிழ்ச்சியடைந்த மன்னன் முனிவர்க்கு அத்புதமான

ஆடை ஆபரணங்களை அளித்தான். தீர்த்த யாத்ரைச் செல்லும் முனிவருக்கு இவைவேண்டாம், ஸப்தமி யன்று வருகின்ற பானுவாரத்தில் ஆரம்பித்து ஸௌரவ்ரதத்தை ஒருமாதம் செய்து வா. ஸ்வர்ண கலஶத்தின் மீது ஸுவர்ணமயமான ஸூர்யமண்டலத்தை ஸ்தாபித்து ஷோடச உபசார பூஜை செய்.

பன்னிரண்டு அர்க்யமளித்து பன்னிரண்டு ப்ரதக்ஷண நமஸ்காரங்களைச் செய். நாள் தோறும் அந்தணர்களைக் கொண்டு லக்ஷ நமஸ்காரம் செய். லக்ஷப்ராம்மண போஜநம் செய். ஒவ்வொரு நாளும் கோதானம் செய்துவா, என்றார் அவர். இங்ஙனம் ஒரு மாதம் செய்து கலஶம், பிம்பம் அனைத்தையும் பிராம்மணர்க் களித்தான். ராஜ பத்னீ ஒருநாளிரவில் சூர்யரூபியான பர்த்தா தன்னிடம் கர்ப்பாதானம் செய்ததாகக் கனவு கண்டாள். காலையில் எழுந்து வந்து கணவனை வணங்கி நியமத்துடன் இருக்கும் பொழுது தாங்கள் எப்படி கர்ப்பாதானம் செய்தீர்கள்? என்று கேட்க அவர் நான் அங்ஙனம் செய்யவில்லை. நாம் உபாஸிக்கும் ஸூர்யனே அங்ஙனம் செய்தார் போலிருக்கின்றது என்றான். அன்று முதல் அவள் கர்ப்பிணியாகி தாபம் தாளமுடியாமல் தாபத்தை யகற்ற பலவகையாக உபாயங்களைச் செய்தாள். எதனாலும் தாபம் அகலாததால் பதியின் உத்தரவு பெற்று ஸமுத்ர தீரத்தில் கர்ப்பத்தை த்யாகம் செய்துவிட்டு வந்தாள்.

ஆங்கு ஓர் பயங்கரமான அஸுரக்குழந்தை உண்டானது. அதனழுகைக் குரலால் ஸமுத்ர ஜலம் சுண்டிற்று. உலகெலாம் நடுங்கிற்று. ஸமுத்ர ராஜன், இது ராஜனது சேய், என உணர்ந்து அவனிடம் கொண்டு சேர்த்தான். அரசன் ஸந்தோஷமடைந்து அநேக தான தர்மங்களைச் செய்து ஜாத கர்மா முதலியன செய்தான். ஸிந்து எனப் பெயரிட்டான். உக்ராதேவியினிடம் பிறந்தவன், உக்ரமாக உள்ளவன் என்பதனால் உக்ரேக்ஷணன் என்ற பெயரும் வைத்தார்கள். குழந்தை மிகப் பயங்கரமான பால லீலைகளைச் செய்தான். அதைக்கண்டு பெற்றோர் பேரானந்தம் அடைந்தனர். தந்தையிடம் உத்தரவுபெற்று ராக்ஷஸ குல குருவான சுக்ரரை யடுத்து மந்த்ரோபதேசம் பெற்றான். கானகம் சென்று பல்லாண்டு மிகக்கடுமையான தவம்

செய்தான். சூரியன் ப்ரத்யக்ஷமாகி வேண்டிய வரத்தைக் கேள் என்றார். ஸிந்து அவரைத் துதித்து தேவாஸுர நரர்களிடமும் பசு பக்ஷி மிருகங்களிடமும் இரவிலும் பகலிலும் இருசந்திகளிலும் தனக்கு மரணம் கூடாதென்றும் வரம் கேட்டான்.

அங்ஙனமே அவர் வரமளித்து ஓர் அம்ருதபாத்ரத்தைக் கொடுத்து இது உன் கழுத்திலுள்ளவரை உனக்கு மரணம் இல்லை. இதை அப்புறப்படுத்துபவரிடமிருந்து தான் உனக்கு மரணமுண்டாகும். அந்த திவ்ய புருஷனது உடலில் அனேககோடி ப்ரஹ்மாண்டங்கள் அமைந்திருக்கும் என்று கூறி சூரியன் மறைந்தார். ஸிந்துவும் பெற்றோரிடம் சென்று இவைகளைக் கூறி மகிழ்ந்தான். பிதாவும் பேரானந்தம் பெற்று புத்ரனுக்குப் பட்டம்சூட்டி வனம்சென்றார். புதிதாக வந்த வேந்தன் திக்விஜயம் செய்வது ராஜ தர்மம். அரிய வரம் பெற்ற ஸிந்துவுக்கு அனைவரும் தலைவணங்கி காணிக்கையளித்தனர். ஆங்காங்கு தனது முத்ரையைவைத்தான். தன்கொடியை ஏற்றினான். தன்னைச் சார்ந்தவரைக் காவலாக அமர்த்தினான்.

இவனது ஒப்பற்ற வீர்யத்தைக்கண்டு அஸுரர் ஸிந்துவைத் துணைகொண்டு தேவரையும் அவரைச்சார்ந்தவரையும் முறியடிக்க விரும்பினர். சும்பன் நிசும்பன் கதம்பன் கமலன் கோலன் முதலியவர் அவனைவணங்கி உம்மைப்போல் அரிய வரம்பெற்ற திருபுரன் எங்களை ஏற்று முவ்வுலகையும் ஜயித்தான். தேவ பதவியிலிருந்து தேவர்களையகற்றி எங்களைத் தலைவனாக்கினான். தாங்களும் அங்ஙனம் செய்தால் தங்கள் கீர்த்தி எங்கும் விளங்கும் என்றனர். அதை ஏற்று அவர்களுக்குத் தக்க ஸன்மானம் செய்து ஏழுலோகங்களையும் ஆளக்கருதி முதலில் சக்ரனிடம் சென்றான். இந்திரனும் ஐராவதத்தில் ஏறி அவனுடன் போர் செய்தான்.

வானளாவ வீரவாதம் கிளம்பின. அஸ்த்ர சஸ்த்ர வர்ஷங்கள் சந்த்ர ஸூர்யர்களை மறைத்தன. இருஸேனை வீரனது தலையறுந்து உருண்டன. ரத்த ஆறு ஓடிற்று. பிணங்கள் குன்றுபோல் குவிந்தன. முடிவில் தேவஸேனை பயந்து ஓடிற்று. இந்த்ரன் வைகுண்ட நாதனைச் சரணமடைந்தான். கருடன்மீதமர்ந்து அவரும் ஸிந்துவுடன் போர்

புரிந்தார். பயந்தோடிய வீரர்கள் ஓடிவந்து கடும்போர் புரிந்தனர். வெற்றியோ தோல்வியோ ஒருவருக்குமில்லை.

விஷ்ணுவின் சக்ரத்தினுல் கொல்லப்பட்ட அஸுரவீரர் வைகுண்டம் சென்றனர். சக்ரத்தால் பலர் மாள்வதைக் கண்டான் ஸிந்து அசுரன். கோபாவேசங்கொண்டு ஸிம்ம நாதம் செய்தான். இந்த்ரன் குபேரன் அக்நி வருணன் வாயு முதலியவர்களை அடித்து வீழ்த்தினுன். விஷ்ணு, கதையினுல் ஸிந்துவின் தலையில் அடிக்க அவன் அசலம்போல் அசையாது நின்ருன். கதையே தூளாக பிளந்து வீழ்ந்தது. ஆச்சர்யம் அடைந்தார் விஷ்ணு. ஓ வீர! மகா சூரனை உன் பலத்தைக்கண்டு களித்தேன். வேண்டிய வரத்தைக் கேள் என்ருர். அப்படியாலுல் தாங்கள் எனது கண்டகீ நகரத்திலேயே எப்பொழுதும் வஸிக்க வேண்டுமென்ருன். பகவானும் அவனது நகரத்தில் வஸித்தார். கைலாஸத்தையும் பிரும்ம லோகத்தையும் தன் வசப்படுத்திக் கொண்டான்.

பகவானுடன் கூட ஸிந்து அஸுரன், நகரத்திற்குவர வேறு எவராலும் முடியாத கார்யத்தை ஸாதித்தீரென அனைவரும் அவனைப் புகழ்ந்தார்கள்? பதவி இழந்த தேவர் ஒன்று கூடி விஷ்ணுவைச் சரணம் அடைந்தனர். சிறிது காலம் பொறுத்திருங்கள் என்ருர். ஸிந்து, தனக்கு ஈடு யாருமில்லை என்று ஆலயங்களிலுள்ள விக்ரஹங்களை அப்புறப்படுத்தினுன். தனது பிம்பத்தை அங்கு அமைத்து எல்லோரும் நித்யம் அதையே வணங்கும்படி உத்தரவிட்டான். அவனது கிங்கரரான அஸுரர் ஆலயங்களுடன் நிற்காமல் யக்ஞ யாகம் தாந தர்மம் முதலியவைகளையும் அழித்தனர். முனிவர்கள் இன்னுட்டை விட்டு மேருமலைக்குச் சென்றனர்.

தேவேந்த்ரன், ஸகல தேவர்களையும் அழைத்து ஸிந்துவின் கொடுமையகல உபாயமென்ன என விசாரித்தான். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழி கூறினுர். ஸுர குருவான பிருஹஸ்பதி, எளிதில் அருள் புரியும் கருணு மூர்த்தியான விநாயகரை, மாக கிருஷ்ண சதுர்த்தியில் பூஜித்தால் ஸங்கடமகலும் என்ருர். அமரர் அனைவரும் கண்டகீதீரம் சென்று ஸிம்ம வாஹனத்துடன் கணேச

மூர்த்தியைச் செய்து விதிப்படி பூஜித்துத் துதித்தனர். கணேசன், தேவர்கள் முன் தோன்றி உங்களது பூஜை யால் உள்ளம் குளிர்ந்தேன். உமையவளிடம் மயூரேச கணபதி என்ற பெயருடன் தோன்றி ஸிந்துவையும் அவனைச்சார்ந்தவர்களேயும் கொன்று உங்கள் துன்பத்தை அகற்றுகிறேன்.

கிருதயுகத்தில் நான் ஸிம்ம வாஹநம், பத்துகைகள், தேஜோரூபியான விநாயகர் என்றபெயர், திரேதாயுகத்தில் ஆறு க்ரஹங்கள் சந்த்ரவர்ணம் மயில்வாஹநம் மயூரேஸ் வரன் என்றபெயர், துவாபரத்தில் ரக்த வர்ணம், நான்கு கைகள் மூஷிகவாஹநம் கஜானன் என்ற பெயருள்ளவ னுகவும் கலியில் கருப்பு வர்ணம் கல்ரூபம் தூமகேது என்ற பெயருள்ளவனுகவுமிருக்கிறேன் என்ருர். இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்த தேவர் த்ரிஸந்த்ய க்ஷேத்ரத்தி லுள்ள பரமசிவனிடம் சென்று சரணமடைந்தார்கள். ஸிந்துஅஸுரனுல் தோன்றிய துன்பத்தை அறிவேன். முநி வர்களும் துன்பத்தினுல் வேறிடஞ் சென்றனர். அதே எனக்குக் கவலையைத் தருகின்றது. மனதிற்கு சாந்தி ஏற் படும்படியான ஒரு இடத்தைக் கூறுங்கள் என்ருர்.

ப்ரபோ! தங்களுக்குத் தெரியாத இடமுண்டோ? தங்களுக்கு இடங்காட்ட நாங்கள் யார்? முநிவர்கள் தவம் செய்யும் ஆஸ்ரமத்தில் தங்களுக்கு உசிதமான இடத்தில் வஸிக்கலாம் என்றனர். ஓர் ஆஸ்ரமத்தில் தங்கி கங்கை கௌரிகளுடன் கூட விநாயகரை உபா ஸித்து வந்தார். தேவி ஸிவனை வணங்கி ஸர்வேஸ்வர னை தாங்கள் யாரை நாடித் தவம் செய்கிறீர்கள்? தங்களுக்கு மேலான தெய்வம் உண்டோ? என்ருள். மூவருக்கும் மேலான விநாயகர் பிரணவ வடிவன். அவர் அருளால்தான் உலக ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் நடக்கின்றது. ஸர்வகுணங்களும் நிறைந்திருப்தால் குணேசன் என்ற பெயருள்ளவர் அவர் என்ருர். அப்படியானுல் அவரை யான் தர்சிக்கவேண்டும். அதற்கு வழி கூறுங்கள் என்ருள். ஏகாக்ஷர விநாயக மந்த்ரத்தை உபதேசித்து, இதைப் பக்தியுடன் ஜபித்துவா. விரைவில் விநாயகரைத் தர்சிக்கலாம் என்ருர். ஜீர்ணபுரத்திற்கு வடதிசையில் உள்ள லேகாத்ரிக்குச் சென்று தேவி ஜபம் செய்தாள்.

பன்னிரண்டாண்டுகள் தேவி நியமத்துடன் ஜபம் செய்து விநாயகரை ஆராதித்து வந்தாள். விநாயகர் தேவியின் எதிரே தோன்றி உனக்கென்ன வரம் வேண்டும் என்ருர். அவரது அழகையும் தேஜஸ்ஸையும் கண்டு ஆநந்தமடைந்த தேவி தாங்கள் எனக்குப் புத்ரனுக அவதரிக்க வேண்டுமென்ருள். அங்ஙனமே ஆகட்டும் என்று, தேவர்களுடைய நன்மைக்காக உனது புத்ரனுக அவதரித்து உன்னிஷ்டத்தையும் பூர்த்திசெய்கிறேன் எனக் கூறி மறைந்தார். அந்த இடத்தில் விநாயகமூர்த்தியை கிரிஜாத்மஜ - பார்வதி புத்ரன் என்ற பெயரால் பிரதிஷ்டை செய்தாள். அந்த இடம் ஸித்தி க்ஷேத்ரம் என வழங்கப்படுகிறது. தேவி ஶிவனிடம் இந்த விருத் தாந்தத்தைக் கூறினுள். எனது பிதா கூறியபடி முன்னம் விநாயக விரதம் செய்தேன், அதனுல் தாங்கள் என்னை ஏற்றுக்கொண்டீர்கள். அதேபோல் பாத்ரபத சதுர்த்தி யில் மண்ணினுல் விநாயகமூர்த்தி செய்து அவரை ஆராதிக்கலாமா எனக் கேட்டாள். அவர் அதை ஆமோதிக்க தேவி சதுர்த்தீ விரதம் செய்து வந்தாள். அந்த பார்த்திவமூர்த்தி உயிர் பெற்று உத்தம விநாயகராகிப் பிரகாசித்தது.

தேவி இதென்ன ஆஶ்சர்யம்? மாயையா? ஸத்யமா? என யோசிக்கும்பொழுது பகவான், கவலை வேண்டாம். நான் முன் வரம் தந்தபடி உன் புத்ரனுகப் போகிறேன் என்ருர். பகவன்! இத்தகைய உத்தம குணரூபத்தை வணங்கி பூஜிக்க அல்லவோ வேண்டும்? உலகத்தவரைப் போல் சிறு குழந்தையாக இருந்தால் அல்லவா பாலூட்டித் தாலாட்டி லாலனை செய்து பேராநந்தம் பெறமுடியும்? என்ருள். பகவான் உடனே மூன்று கண்களும் ஆறு கரங்களும் சந்திரனைப்போன்ற திருமேனியும் ஸ்படிகம்போல் ப்ரகாசமும் கைகால்களில் பாஶ அங்குஶ ரேகைகளும் உள்ள குழந்தையானுர். ஆகாஶத்திலிருந்து புஷ்பமாரிப் பொழிந்தது. துந்துபி முழங்கிற்று. மந்தமாருதம் வீசிற்று. மரங்கள் எல்லாம் பழுத்தன. செடிகள் எல்லாம் பூத்தன. எங்கும் ஸுபிக்ஷம்! மங்களம்!

கணங்கள் ஶிவனிடம் இதைத் தெரிவிக்க அவர் விரைந்து வந்தார். அருமைக் குழந்தையைக்கண்டு களித்து இது ஶிஶுவல்ல. ஸர்வேஶனை குணேஶனே என்ருர். உலகரீதியை அநுஸரித்து ஶிவனும் குழந்தைக்கு ஜாத கர்மா முதலியவைகளைச் செய்தார். விதை, கோ, வஸ்த்ரம், ஸுவர்ணம், பழம், தாம்பூலம் முதலிய தாநங்களைச் செய்தார். பாத்ரபத ஶுக்ல சதுர்த்தி ஸோம வாரம் ஸ்வாதி நக்ஷத்ரம் ஸிம்மலக்னத்தில் ஐந்து க்ரஹங்கள் உச்சமாக இருக்கும்பொழுது விநாயகர் ஶிஶுவாக அவதரித்தார். பதிஞேராவது நாளில் குணேஶன் எனப் பெயரிட்டார். வந்த முநிவர்களெல்லாம் குழந்தையைக் கண்டு ஆநந்தித்து யார் எந்த கர்மாவை ஆரம்பித்தாலும் குணேஶருக்கு முதல் பூஜை செய்யவேண்டும் என்ற வரத்தை அளித்தார்கள். அன்றியும் அவர் அவதரித்த சதுர்த்தியில் மிருண்மயமான விநாயகமூர்த்தியைச் செய்து எல்லோரும் அர்சிக்கவேண்டும். இருபத்தோரு தத்வ வடிவஞன விநாயகருக்கு அதைக் காட்ட மோதகம், புஷ்பம், தூர்வை, பழம், பிராம்மண போஜநம் எல்லாம் இருபத்தொன்ருகவே இருக்கவேண்டும். அவரைப் பூஜிக்காமல் செய்யும் கார்யத்திற்கு விக்நம் உண்டாகும், என எண்பத்தெட்டாயிரம் முநிவர்களும் விநாயகரை தர்சித்துக் கூறிஞர்கள். இந்த வைபவத்தைக் கண்ட ஸிந்துவின் தூதர்கள் ஓடிதைத்தியேந்த்ரனிடம் அறிவித்தனர். தங்கள் உத்தரவு பெற்று ஏழுகோடி வீரர்கள் போய் எல்லோரையும் கொல்வோம். ஆஞல் எங்கள் எல்லோரையும் அவர்கள் கொன்ருல் தங்களுக்கு யார் வந்து நடந்ததைக் கூறுவர் என்றனர். இதனிடையில், ஸிந்தோ! உன்னைக்கொல்லவே ஒரு குழந்தை உண்டாகி இருக்கின்ருன். என அசரீரியான வாக்கும் கூறியது. கொல்லுங்கள்! கொல்லுங்கள்! யார் அவச்சொல் கூறியது? என்ருன் ஸிந்து. ஆகாஶத்திற்கு எழும்பிச் சென்ற வீரர்கள் ஒருவரையும் காணவில்லையே! என திரும்பினர். அஸுரன் தனக்கும் மரணம் வரும் எனக்கேட்டு சிந்தை கலங்கி நின்ருன். அஸுரேந்த்ர! தாங்களே எல்லோர் உயிரையும் கொண்டு செல்லும் யமன். யமனுக்கு ஒரு யமன் உண்டோ? உத்தரவு அளியுங்கள்! நாங்கள்

சென்று எல்லோரையும் கொன்று திரும்புகிறோம் என அவன் கவலையை அகற்றினார்கள் அஸுரவீரர்கள்.

தனது குமாரி பார்வதிக்கு புத்ரன் பிறந்தான் எனக் கேட்டு பர்வதராஜன் வந்து குழந்தைக்கு ஆடை ஆபரணங்களைத் தந்து தன்மடிமீதமர்த்தி ஆனந்தமடைந்தார். ஹேரம்பன் எனப் பெயரிட்டுச்சென்றார். ஒருநாள் குழந்தையைத் தாழ்வாரத்தில் படுக்கவைத்து உமையவள் வேறு வேலையில் ஈடுபட்டிருந்தாள். அச்சமயம் க்ருத்ராஸுரன் என்பவன் கழுகு ரூபமெடுத்துக் குழந்தையை ஆகாசத்தில் தூக்கிச் சென்றான். தேவி குழந்தையைக்காணுமல் கதறினாள். தோழிகள், அம்மா? அவர் குணேசர்! பரமாத்மா! அல்லவா? அவரை யார் என்ன செய்யமுடியும்? எப்படியும் ஜீவனுடன் விரைவில் வருவார் என்று கூறினர். ஆகாசத்திலிருந்து மலை போல் ஒரு ராக்ஷஸ சரீரம் விழுந்தது. அதன் மீது குழந்தை யாதொரு துன்பமும் இன்றி விளையாடக்கண்டனர். ஆஸ்சர்யமடைந்து சிவனிடம் இதைக் கூற க்ருத்ர ராக்ஷஸன் செயலையும் அவனை இவர் கொன்றதையும் கூறி அஸுரர்களைக் கொல்வதற்காக அவர் அவதரித்திருப்பதால் இங்ஙனம் பலர் வருவர். தீங்கிழைப்பவர் தான் மாளுவர் என்றார். இரண்டாவது மாதத்தில் இரு அஸுரர்கள் இரு எலிகளாகி ஒன்றோடொன்று சண்டையிட்டுக் குழந்தைமீதுவிழுந்து அவரைக்கொல்லமுயற்சித்தனர். இரு கரங்களாலும் அவர்கள் கழுத்தைப் பிடித்து அழுத்திக் கொன்றது குழந்தை.

அவர்களது பயங்கரமான ராக்ஷஸ சரீரத்தை வெட்டி எறிந்தனர். மூன்றாவது மாஸத்தில் ஒருவன் பூனையாகி குழந்தை யருகிலே அமர்ந்து ஒருவரும் இல்லாத ஸமயத்தில் அவரைக் கொல்ல நினைத்தான். அதைக்கண்டு பயந்தது போல் அழுது, குழந்தை காலால் அதை உதைக்க அந்த உதைதாளாமல் அவன் இறந்தான். பயங்கரமான அஸுர சவத்தை அப்புறப்படுத்தி உமை குழந்தைக்கு முனிவர்களைக் கொண்டு ரக்ஷை அளித்தாள். நான்காம் மாஸத்தில் ரிஷிபத்னிகளும் தேவபத்னிகளும் காணிக்கைகளுடன் குழந்தையையும் தாயையும் கொண்டாட வந்தனர். தேவி அவர்களுக்குக் குங்குமம் தாம்பூலம் வழங்கினாள்.

விநாயகரைக் கீழே படுக்க விட்டிருந்தாள். வெளியிலிருந்து வந்த குழந்தைகள் விநாயகர் அழகையும் சிரிப்பையும் விளையாட்டையும் கண்டு அவரைச் சூழ்ந்து கொண்டு விளையாடினர். ஒரு அஸுரன் பால உருவங் கொண்டு அவர்களுடன் விளையாட்டுச் சண்டையிட்டு விநாயகர் மீது விழுந்து அவரைக்கொல்ல அருகில் வந்தான். உடனே விநாயகர் அவன் கழுத்தை இரு கரங்களாலும் பிடித்தார். அவன் கதறிக்கொண்டு கண் விழி புதுங்க விடு விடு எனக்கத்தினான். உமையும் ஓடிவந்து ரிஷிகுமாரனை இம்ஸிக்காதே! என அவர் கையை இழுத்தாள். அதற்குள்ளாக அவன் விழுந்து ராக்ஷஸ உடலுடன் மாண்டான். இதைக்கண்ட எல்லோரும் ஆஶ்சர்யமடைந்தனர். ஐந்தாம் மாதம் பிறந்தது. மரீசி எனும் முனிவர் தேவி ஆஶ்ரமத்திற்கு வந்தார். தேவி தக்கபடி உபசரித்தாள். நான் பரமசிவனை த்யானம் செய்யும்பொழுது இக்குழந்தை எனது மனதில் தோன்றிற்று. ஆதலால் அதைத் தர்ஶிக்கவே வந்தேன் என அதை மடிமீதமர்த்தி அதன் பெருமையை விளக்கி கணேஶ கவசத்தையும் உரைத்தார்.

## ஸ்ரீ கணேச கவசம்.

த்4யாயேத்ஸிம்ஹக3தம் விநாயகமமும்திக்3 பா3ஹு மாத்3யே யுகே3
த்ரேதாயாம்து மயூரவாஹனமமும் ஷட்3பா3ஹுகம் ஸித்தி4த3ம் ॥

த்வா3பரே துக3ஜானனம் யுக3பு4ஜம் ரக்தாங்க3ராக3ம் விபு4ம் ।
திஷ்யேது த்3விபு4ஜம் ஸிதாங்க3ருசிரம் ஸர்வார்த2த3ம் ஸர்வதா ॥

விநயக: ஶிகா2ம்பாது பரமாத்மா பராத்பர: ।
அதிஸுந்தரகாயஸ்து மஸ்தகம்ஸு மஹோத்கட: ॥

லலாடம்காஶ்யப: பாதுப்4ரூயுக3ம்து மஹோத3ர: ।
நயனேபா4லசந்த்3ரஸ்துக3ஜாஸ்யஶ்சோஷ்ட2பல்லவௌ ॥

ஜிஹ்வாம்பாதுக3ண க்ரீட3ஶ்சுபு3கம் கி3ரிஜாஸுத: ।
வாசம்விநாயக: பாதுதந்தான்ரக்ஷது து3ர்முக:2 ॥

ஶ்ரவணௌபாஶபாணிஸ்து நாஸிகாம் சிந்திதார்த2த:3 ।
க3ணேஶஸ்துமுக2ம் கண்டம் பாதுதே3வோ க3ணஞ்ஜய: ॥

ஸ்கந்தௌ4 பாதுக3ஜஸ்கந்த:4 ஸ்தனௌ விக்4னவிநாஶன: ।
ஹ்ருத3யம்க3ணநாத2ஸ்து ஹேரம்போ3ஜட2ரம் மஹான் ॥

ஓம்: தத்: ஸத்:

சித்த மருந்துகளில்



நிறைந்த சாதனைகள் !

# நல்வாழ்வுப் பணி

## " சித்த மருத்துவத்தின் சிறப்பு "

சித்தர்களின்

அளவிலாப் பெருமைக்குச் சிறந்த அத்தாக்ஷி

**K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியின்**

## "மேல்மாயில் மருந்து"

தீராத நாட்பட்ட சரும ரோகங்களுக்கு சிறந்த நிவாரணி.

.............. முழு விவரங்கட்கு எழுதுங்கள் ..............

சித்தர் டாக்டர்

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரி & சன்ஸ்,

5/22 மேல்மாயில் P. O., N. A. DT.

